# பெண்கள் உலகம்

ஆசிரியர் :
யாழ்ப்பாணத்து நவாலியூர்
திரு. ந. சி. கந்தையா பிள்ளை
[தமிழர் சரித்திரம், தமிழகம், வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட
பழந் தமிழர், தமிழ் இந்தியா, தமிழர் யார்? நமது நாடு,
நமது மொழி, சிவன் முதலிய பற்பல
நூல்களின் ஆக்கியோன்.]

தி ஜுபிடர் பப்ளிஷிங் ஹௌஸ்,
சென்னை.
1946.



[விலை அணு 14

# முன்னுரை

பெண்கள் ஆண்களுக்கு அடிமைகள்; அவர்கள் ஆடவருக்கு எல்லாவகையிலும் கட்டுப்பட்டு ஒழுகும் கடப்பாடுடையர்; பெண் பிறவி பாவமிகுதியினல் உண்டாவது என்பன போன்ற பொல்லாத கொள்கைகள் இன்றைய மக்களிடையே காணப்படுகின்றன. உண்மையில் பெண்களே ஆடவரிலும் உயர்ந்தவர்களாகவும், அவர்களைச் சீர்திருத்தியவர்களாகவும் காணப்படுகின்றனர். இன்று பெண்கள் ஆடவருக்கு அடிமைப்பட்டு இருப்பது பொருளாதார நிலை ஒன்றினலேயேயாகும். பெண்கள் வாழ்க்கைச் செலவுக்கு ஆடவரின் கையை எதிர்பாராது தாமே பொருள் ஈட்டும் நிலையில் இருப்பார்களேயாயின் அவர்கள் ஆடவருக்குக் கட்டுப்பட்டு நடக்கும் கட்டாயம் உண்டாகாது. தொடக்கத்தில் பெண்களே பயிர்த்தொழில் கைத்தொழில்கள் புரிந்து ஆடவருக்கும் உணவு அளித்துவந்தார்கள். அதனல் ஆடவர், மகளிருக்குப் பணிந்து நடந்தார்கள். பெண்கள் ஆட்சியே ஆதியில் நடைபெற்றது. பிற்காலத்தில் ஆடவர் சுயநலங் கருதி அவர்களின் பொருளாதார நிலையைப் பறித்து அவர்களைத் தமக்கு அடங்கி நடக்கும்படி செய்தனர். பெண்கள் ஆண்களுக்கு அடங்கி நடத்தல் இயற்கை விதியன்று; ஆண்கள் பெண்களுக்கு அடங்கி நடத்தலே இயற்கை விதியாகும். இவைபோன்ற பெண்களின் பிறமாண்புகளை வரலாற்று முறையில் ஆராய்ந்து கூறுகின்றது இந்நூல்.

சென்னை
10—5—46

ந. சி. கந்தையா.

Printed at the Sengunthe Mithran Press, Madras for M.S. 44.

# பொருளடக்கம்

எண் பக்கம்

# பெண்கள் உலகம்

---

## தோற்றுவாய்

ஆதியில் பெண்கள் ஆடவரைவிட உயர் நிலையில் இருந்தார்கள். அவ் வரலாறு இன்று மறக்கப்பட்டது. சில செயற்கைக் காரணங்களால் இன்று அவர்கள் தமது உயர் நிலையினின்றும் வீழ்ச்சியடைந்தனர். ஆடவருக்குப் பணிந்து நடக்கும்படி பெண்கள் கடவுளாற் படைக்கப்பட்டுள்ளார்கள் என்றும் அவர்கள் ஆண்களுக்குப் பணிந்து நடத்தலே இயற்கை விதியென்றும் நம்பப்பட்டு வருகின்றன. பெண்களின் வரலாற்றை ஆராயுமிடத்து உண்மை இதற்கு நேர்மாறாகவுள்ளது. ஆட்சியும் சொத்துரிமையும் நீண்டகாலம் பெண்களிடமே இருந்து வந்தன. பெண்களின் அதிகாரம் சிறிது சிறிதாக ஆடவரின் கைக்கு மாறியபோது பெண்களைக் கட்டுப்படுத்துவனவும், கட்டி ஆள்வனவுமாகிய சமூகக் கட்டுப்பாடுகளை ஆடவர் உண்டுபண்ணினர். இதனால் ஆடவர் ஆளவும் பெண்கள் ஆளப்படவும் பிறந்தார்கள் என்னும் தவறான கருத்து மக்கட் சமூகங்களிடையே தோன்றி வுலுவடைந்துள்ளது. வரலாற்று முறையில் பெண்களின் பெருமையை உள்ளவாறு எடுத்து விளக்குவதே இந்நூலின் இலக்காகும்.

## உயிர்ப் படைப்புக்களும் அவைகளின் தொழில்களும்

இவ்வுலகின்கண் காணப்படும் அசைவுள்ள, அசைவற்ற எல்லா உயிர்ப் பொருள்களையும் நோக்குவோமாயின் அவை, உணவு தேடுதல் சந்ததியை விருத்திசெய்தல் என்னும் இரு

தொழில்களிலேயே ஓவாது உழன்று வருகின்றன எனத் தோன்றும். சந்ததியைப் பெருக்கும் வன்மை இழந்த உயிர்கள் விரைவில் மடிந்து போகின்றன. இதனால் சந்ததியைப் பெருக்குவது உயிர்களின் முக்கிய நோக்கம் எனத் தெரிகின்றது.

## ஆண் பெண் விலங்குகள் சோடிகளாக வாழ்கின்றனவா?

பறவைகளுள் முட்டையிட்டு நீண்டகாலம் அடைகாத்துக் குஞ்சு பொரிக்கும் பறவைகள் சோடிகளாக வாழ்கின்றன. விலங்குகளின் வாழ்க்கையை நன்கு பயின்றவர்கள் அவை சோடிகளாக வாழாது தனித்தனிக் கூட்டங்களாக வாழ்கின்றன என்று கூறுகின்றனர். காட்டில் வாழும் விலங்குகள் பறவைகளுக்குக் கருக்கொள்ளும் உணர்ச்சி (Seasonal rut) ஆண்டின் ஒவ்வோர் காலங்களிலேயே உண்டாகின்றது. $ பெண் விலங்குகளும் ஆண் விலங்கு

---

$ Among mammal and other animals a periodic rut is general througout universal. It is a fact that spring and the harvest are among the savages, barbarians and the modern peasants, regular seasons both for general festivity and for special development of sexual feelings. The reason may be partly biological, partly climatic and mostly connected with mass food supply—Studies of savages - p. 91.—Earnest Crowley.

"குட்டிக்குத் தாய்ப் பால்கொடுத்து வளர்க்கும் விலங்குகளுக்கும் பிற உயிர்களுக்கும் ஆண்டின் சிலகாலங்களில் ஆண் பெண் சேர்க்கை தொடர்பான மதம் உண்டாகின்றது. இது உலகம் முழுமையிலும் காணப்படுகின்றது. இலை துளிர்காலத்தும் தானிய அறுவடைகாலத்தும், காட்டுச் சாதியினரும் இக்கால நாட்டு மக்களும் தமது விழாக்களைக் கொண்டாடுகின்றனர். அக்காலங்களில் ஆண் பெண்

களும் தனித்தனிக் கூட்டங்களாகப் பிரிந்து வாழ்கின்றன. பெண்ணினங்கள் கருத்தரிக்கும் காலத்தில்மாத்திரம் ஆண் விலங்குகள் பெண் விலங்குகளினிடையே காணப்படுகின்றன. ஆண் விலங்குகளினிடையே பெண் விலங்குகள் காணப்படுவதில்லை. கருத்தரிக்கும்பொருட்டு ஒரு பெண் ஒரு ஆணைத் தெரிந்து எடுப்பது இயற்கைத் தெரிவு (Natural selection) எனப்படும். எப்பொழுதும் பெண் விலங்கு வீரமுடைய ஒரு விலங்கையே தெரிந்துகொள்ளுகின்றது. ஒரு பெண் மானின் பொருட்டுப் பல ஆண் மான்கள் பல நாளாக ஒன்ருேடு ஒன்று எதிர்த்துப் போராடியதையும், அப்போரில் பங்கு பற்ருது தனியே அப் போரைப் பார்த்து நின்ற பெண்மான் இறுதியில் வெற்றியடைந்த ஆண் மானையே விருப்பத்துடன் தெரிந்துகொண்டதையும் பற்றி டார்வின் என்னும் இயற்கை நூற் புலவர் எடுத்துக் கூறியுள்ளார்.[1] ஆண் பெண் சேர்க்கைக்குப் பின்னுல் ஆண் விலங்குகள் தம் கூட்டத்திற்குச் சென்று வாழும். இயற்கைத் தெரிவு ஆண்களாலன்று பெண்களாலேயே தெரியப்படுகின்றது.[2]

---

சேர்க்கை உணர்ச்சியும் வளருகின்றது. இக்காரணத்தின் பகுதி பிராணிகளின் இயற்கை சம்பந்தமும், பகுதி உணவு, வெப்ப நிலைகளுமாக விருக்கலாம்."

1. Sexual selection among animals is supposed, by Darwin to be exercisd by females and not by males—*The Mothers.*

2. Among animals the female admits the male at such times only as she is prepared for the exercise of his function. At other times she repels him, and her attitude towards him is generally one of positive hostility. The description given by Pallas of the mannar in which the female camel rounds

## கூட்டத்துக்குப்பின் பெண் விலங்குகள் ஆண் விலங்குகளை உடன் வாழ அனுமதிப்பதில்லை

"ஆண் பெண் கூட்டத்துக்குப்பின் இரு இனத்துக்கும் ஒருவகை வெறுப்பு உண்டாகின்றது.[3] குட்டிக்குப் பால் கொடுத்து வளர்க்கும் விலங்குகளிடையே இவ் வெறுப்பு மிகக் காணப்படுகின்றது. அமெரிக்க துருவ மான்கள் (Rein deer) ஓரிடத்தினின்றும் இன்னோரிடத்திற்றங்கி வாழும்பொருட்டுச் சொல்லும்போது ஆண்களும் பெண்களும் தனித்தனிக் கூட்டங்களாகச் செல்லும். எல்லா இன மான்களிடையும் இவ் வியல்பைக் காணலாம். புரட்டாசி மாதத்துக்குப்பின் எருமைகளுள் ஆண் பெண் இனங்கள் தனித்தனி பிரிந்து வாழ்கின்றன. ஆண் பெண் சேர்க்கைக்குப்பின் பெண் வௌவால் ஆண் வௌவாலைக் கடித்துத் துரத்திவிடுகின்றது. பெண் வௌவால்களின் மத்தியில் ஆண் வௌவால்கள் காணப்படுவதில்லை. கருக்கொண்டபின் பெண் யானைகள் ஆண் யானைகளைத் துரத்திவிடுகின்றன. பெண் யானைக் கூட்டத்துள் ஆண் யானையைக் காண்டல் அரிது. பருவம் அடையும் வரையும்

---

on the bull the moment shc is impregnated, driving him away with much snarling and display of teeth. Except on the moment when she herself is on a state of rut observes Dr. Tiller 'the female absolutely refuses any sexual intercourse'—*Ibid.*

3. After the function is fulfilled there appears to be as a general rule an actual repulsion between the sexes. "As soon as the pairing is over" says Brehm speaking of mammals "Generally, great indifference is shown towards one another by the sexes—The Mothers Vol. 1. P, 122.

மாத்திரம் ஆண் யானைக் கன்றுகள் தாய் யானைகளுடன் தங்கும். பெண் நீர்நாய்கள் கருக்கொள்ளும் காலத்துக்குப் பின் ஆண்களும் பெண்களும் பிரிந்து தனித்தனிக் கூட்டங்களாக வாழும். அணில்களும் இவ்வாறே பிரிந்து வாழ்கின்றன. குரங்குகளைப்பற்றியும் இவ்வாறு சொல்லப்படுகின்றது. 'ஓரான் ஊத்தான்' என்னும் குரங்குகள் ஆணும் பெண்ணும் கலந்த கூட்டமாக வாழ்வதில்லை. கொரிலாக் குரங்குகள், ஆண்கள் ஒரு தனிக் கூட்டமாகவும், பெண்களும் குழந்தைகளும் மற்றொரு கூட்டமாகவும் வாழும்" தாய்மார். (The mothers)

## ஆடவரும் மகளிரும் தனித்தனிக் கூட்டங்களாக வாழ்ந்தார்கள்

விலங்கு நூல்முறையில் மனிதன் விலங்கினத்தைச் சேர்ந்தவன். ஆகவே அவனும் ஒருகாலத்தில் விலங்குகளை ஒப்பவே வாழ்ந்தான் என்று கூறுதல் பிழையாகாது. ஆண்களும் பெண்களும் தனித்தனிக் கூட்டங்களாக வாழ்ந்தார்கள் என்பதற்குரிய சில வழக்கங்கள் இன்றும் காணப்படுகின்றன. மக்களிடையே இயற்கைத் தெரிவு பெண்களாலேயே செய்யப்பட்டது.[4] மகளிரும் ஆடவரும் கலந்து வாழாது தனித்தனிக் கூட்டத்தினர்களாகவே நீண்டகாலம் வாழ்ந்துவந்தார்கள் என்பதற்குரிய ஆதாரங்கள் மேற் கூறப்படும் பொருள்களில் ஆங்காங்கு வருகின்றன. ஆகவே அவைகளை இவ்விடத்தில் விரித்து எழுதிற்றிலேம்.

## "அமேசன்" என்னும் பெண் போர் வீரியர்

முற்காலத்தில் இராணியால் ஆளப்பட்ட பெண் இராச்சியம்ஒன்று உலகின் சிலபகுதிகளில் இருந்ததென்னும்

---

4. What sexual selection exists among the lower races is predominatly exercised by the women—Ibid.

மேல்நாட்டுப் பழங்கதை ஒன்று உள்ளது. பெண்கள் ஆடவரின் கலப்பின்றித் தனித்து வாழ்ந்தார்கள்; அவர்கள் ஆடவர்களைப்போலப் போர் செய்யவும் வேட்டையாடவும் பழகியிருந்தார்கள். ஆண்டின் ஒரு முறையோ இரு முறையோ ஆடவர் பெண்களைச் சந்திக்கும்படி அநுமதிக்கப்பட்டார்கள். சிலநாட்களின்பின் அவர்கள் பிரிந்து தமது கூட்டத்தைச் சேர்ந்துவிடுதல் கட்டாயமாக விருந்தது. அமேசன் எனப்பட்ட பெண்கள் அவர்களால் உண்டாக்கப் பட்டசட்டதிட்டங்களைக்கொண்டு அரசினரால்ஆளப்பட்டார் கள். தயதோரஸ்(Diodorus)ஸ்ராபோ(Strabo) முதலிய வரலாற்று ஆசிரியர்கள் அமேசன் என்னும் பெண் இராச்சியம் காகேசிய மலைகளுக்கும் யுக்சின் (Euxine) கரைகளுக்கும் இடையில் இருந்ததெனக் குறிப்பிட்டுள்ளார்கள். அவர்கள் வில்லை நன்றாக இழுத்து வளைக்கும் வாய்ப்புப் பெறுவதற்காக வலது தனத்தை வெட்டி எடுத்திருந்தார்கள்.

போர்ப்பிரியமுள்ள இக் கூட்டத்தினர் பிர்கியா (Phrygia) என்னும் நாட்டின்மீது படை எடுத்தார்கள். ரோசருக்கு (Trojans) உதவியாகப் போர் செய்யும் பொருட்டுப் படைக்குத் தலைமை தாங்கிச் சென்ற அமேசன் இராணி அச்சில்லீஸ் என்பவனாற் கொல்லப்பட்டாள்.

காக்கேஸ் மலையிடத்திலே கணவரைச் சந்திப்பதால் பிறக்கும் பிள்ளைகள் பெண்களாயின் அவர்கள் அவைகளைத் தாமே வளர்த்தார்கள், ஆண்கள் ஆயின் கொன்றார்கள்; அல்லது ஆடவரிடம் அனுப்பி வைத்தார்கள்.[5]

5. It is claimed by some writers that in certain parts of the world there have existed tribal communities comprised exclusively of women who work, fight and hunt like men. The males live apart in seperate community. Periodically,

தமிழ் நாட்டில் வழங்கும் ஆரவல்லி சூரவல்லி கதை, அல்லி அரசாணி கதை, பவளக்கொடி கதைகள் தமிழ் நாட்டு அமேசன் கதைகளேயாகும்.

## காமம் என்பது யாது ?

இவ்வுலகப் படைப்புக்கள் எல்லாம் ஆண் பெண் என்னும் இருவகைகளாக அமைந்துள்ளன. இவ் விரு இனங்களின் ஆண் பெண் சேர்க்கையால் உலகில் அவைகளை ஒத்த சந்ததிகள் தோன்றிப் பெருகுகின்றன. சந்ததி பெருகுவதற்கு ஆண் பெண் சேர்க்கை அவசியம் வேண்டப்படுகின்றது. இயற்கையாகவே எல்லா உயிர்களிடத்தும் தம்மைப்போன்ற உயிர்களைத் தோற்றுவிக்கும் இயற்கை உணர்ச்சி பதிந்து உள்ளது. தம்மைப்போன்ற உயிர்களைத் தோற்றுவிக்கும் பருவம் எய்திய ஆண் இனங்களும் பெண்ணினங்களும் எதிர்ப்படும்போது உள்ளே மறைந்திருந்த உணர்ச்சி கிளர்ந்து எழுந்து வெறிபோல் வெளிப்படுகின்றது. இவ்வாறு கிளர்ந்தெழும் வெறியே காமம் எனப்படுகின்றது.

ஆண் பெண் சேர்க்கைக் காலங்களில் மாமிச உணவு கொள்ளும் விலங்குகள் ஒன்றை ஒன்று பற்களாற் கடித்தும்

---

once or twice a year at a fixed time, the men are permitted to visit or meet their amazon wives for a certain number of days, after which they seperate once more and go back to live in their own communities. The amazons lived under the rule of a queen and were governed by their own laws and customs. Children which resulted from this meeting, if female, were brought up by their mothers and became part of the amazon nation ; if male, they were either slain or sent to the Garareans—Amatory Curiosa - p. 3.

நகங்களாற் கிழித்தும் உடம்பில் காயங்களை உண்டுபண்ணு கின்றன. வீடுகளிலே பூனைகள் இவ்வாறு செய்வதை நாம் பார்க்கின்றோம். சிங்கங்களும் புலிகளும் ஆண் பெண் சேர்க் கைக் காலங்களில் காட்டில் வாழும் உயிர்கள் எல்லாம் நடுங் கும்படி முழக்கஞ் செய்கின்றன. மிருகங்களிடத்திற் காணப்படும் இவ்வகை இயல்புகள் மக்களிடையே இருந்து சிறிது சிறிதாகப் பண்பட்டுள்ளன. இன்ப நூல்களிற் கூறப்படும் பற்குறி நகக்குறி என்பன ஆண் பெண் சேர்க் கைக்காலத்துத் தோன்றும் வெறியினுற் கடிக்கும் பற்றழும்பு களும், நகங்கள் கீறும் நகத்தழும்புகளுமேயாகும். முத்தம் என்பதும் காம உணர்ச்சியாற் கடிக்கும் கடியின் பண்பாடே யாகும்.[6] ஆண் பெண் சேர்க்கைக்குப்பின் ஒருவரில் ஒருவர் பற்று இன்றிப் போகும் காதல் வெறியைக் காமம் எனக் கூறுதல் அமையும்.[6]

## காதல்

காமத்தின் பண்பாடே காதல் எனப்படும். காதல் உணர்ச்சி ஆண் பெண் என்னும் இருபாலாரையும் அவர்க ளின் இளமை கழிந்த காலத்தும் இணைத்து வைப்பதாகிய உயர்ந்த பண்பு.

தாய், பிள்ளைகளைப் பெறுகின்றாள்; பெற்ற பிள்ளைகள் மீது அன்பு கொள்கின்றாள். இவ்வாறு தோன்றும் அன்பு தலைமுறை தலைமுறையாக வளர்ச்சி யடைகின்றது. இவ் வகை இளகிய உள்ளமுள்ள பெண் இயற்கைத் தெரிவு

6. Kiss has developed out of love bite. In many parts of Europe women are not convinced of their lovers or husbands' affection unless their own lovers leave the visible marks of it in the form of incesions from their teeth—The Mothers Vol. 2. P. 16.

செய்யும்போது தான் தெரிந்தெடுத்த ஆடவன்மீது கசிந்த உள்ளமும் அன்பு கலந்த உணர்ச்சியுமுடையவளாகின்றாள். ஆண் பெண் சேர்க்கைக்குப் பின்பும் அவ்வுணர்ச்சி அவளை விட்டுப் பிரியாமல் இருக்கின்றது. இப் பண்பட்ட உள்ளப் பிணிப்பே காதல் எனப்படுகின்றது. காதல் உணர்ச்சி பெண்களிடத்திலேயெ முதலிற் றோன்றி வளர்ச்சியடைவதாயிற்று.$

# தாய் ஆட்சி

## தாய் வட்டங்கள்

நாம் எல்லோரும் தேன் கூட்டில் ஈக்கள் எப்படி வாழ்கின்றன என்று அறிவோம். தேன் கூட்டின் மத்தியில் இராணி, அல்லது தாய் ஈ இருக்கின்றது. அதனைச் சூழ்ந்து அதன் பிள்ளைகளாகிய மற்றைய ஈக்கள் இருக்கின்றன. இதனை ஒரு தாய் வட்டம் எனக் கூறலாம். இதனை ஒப்பவே மக்களும் தாய் வட்டங்களாகப் பெருகுகிறார்கள். பிள்ளைகளுள் ஆண்கள் வேட்டையாடுவோராக அலைந்து திரிந்தனர். பெண்கள் ஓரிடத்தில் தங்கி வாழ்ந்தனர். வயதின் மூத்த தாயே குடும்பத்தின் தலைவியாக விருந்தாள். அவள் சொல்லுக்கு எல்லாரும் அடங்கி நடந்தார்கள். தாய்க்கு அடுத்தபடியில் அவளின் மூத்த குமாரி அதிகாரமுடையவளானாள்.

---

$. The gradual admixure of tenderness with the mating instinct, its transformation into love is a pace which has taken place in the psychological evolution of the female, and it appears probable that in the human species love was at first confined to mothers—The Mothers Vol. 1 - p. 123.

Sensual love is fickle; it is influenced by the desire of change. On the otherhand, when the love implies sympathy

பெண்கள் ஓரிடத்திற் கூட்டமாக வாழ்ந்தமையின் அவர்கள் வாழும் இடங்களிலேயே உணவைப் பெறவேண்டியிருந்தது. ஆகவே அவர்கள் தாம் வாழும் இடத்திலும் அதன் அண்மையிலும் பழ மரங்களையும் தானியங்களையும் பயிரிட்டுத் தமக்கு வேண்டிய உணவுப் பொருள்களைப் பெற்றனர்.[7]

உணவின்பொருட்டு ஓய்வின்றி அலைந்து திரியும் நிலையின் மக்களின் நாகரிகம் உதயமாகவில்லை. உணவு எளிதிற் கிடைத்தபோது அவர்கள் ஆறுதல் அடைந்து அமைதியாக வாழத் தொடங்கினர்கள்; வாழ்க்கைக்குத் தேவைப்படும் சட்டி, பானை, பெட்டி, கடகம், பயிர்த்தொழிலுக்கு வேண்டும் ஆயுதங்கள் போன்றவற்றைச் செய்தார்கள். அதனால் சிறிது சிறிதாகக் கைத்தொழில் வளர்ச்சியடைந்தது. அலைந்து திரியாது ஓரிடத்தில் தங்கி வாழ்ந்தவர்களாகிய பெண்களே கைத்தொழிலையும் பயிர்த்தொழிலையும் விருத்தி செய்தவர்களாவர். ஏர் பூட்டி நிலத்தை உழும் காலம் வரையில் ஆடவர் பெரிதும் வேட்டையாடும் நிலையிலேயே இருந்தார்கள். ஆடவர் சில சமயங்களில் பெண்களையே

---

and affection arising from mental qualities there is a tie between husband and wife; which lasts long after youth and beauty are gone. This leads to monogamy that is enduring - A Short History of Marriage - p. 247.

7. The women food-gatherers became the first plant cultivators and the men, apart from lending some assistance in preparing the garden continued as hunters. This generally admitted as affording the best explanation of why among premitive plant cultivators the system of descent is generally of the maternal type i.e. Kinship is reckoned in the female line—Ecology - T. W. Bews - p. 179.

உணவின்பொருட்டு எதிர்பார்க்கவேண்டியிருந்தது. பெண்கள் ஆடவரினும் கண்ணியமுடையவர்களாகக் கருதப்பட்டார்கள். ஆடவர் பெண்களுக்குப் பணிந்து ஒழுகினர். உணவுப் பொருளே மக்களின் செல்வமாகக் கருதப்பட்டது. பெண்களிடத்திலேயே அதிக உணவு இருந்தது.

## ஒரே தாய் வட்டத்துள் திருமணக் கலப்பு இல்லை EXOGAMY.

ஒரு தாய் வழியாகப் பெருகியவர்கள் எல்லோரும் ஒருவருக்கு ஒருவர் உடன்பிறப்பு முறையினராகக் கருதப்பட்டார்கள். ஆகவே ஒரு தாய் வட்டத்திலுள்ள ஆடவரும் மகளிரும் திருமணக் கலப்புடையவராய்ப் பிள்ளைகளைப் பெறுதல் கடியப்பட்டது. ஒரு தாய் வட்டத்தேயுள்ள பெண் பருவமடைந்தபோது இன்னொரு தாய் வட்டத்திலுள்ள ஆடவனைச் சேர்ந்து பிள்ளைகளை ஈன்றாள். பெண்ணின் கணவன் தனது தாய் வட்டத்தில் சென்று வாழ்ந்தான். பெண்ணின் தாய் வட்டத்தில் அவன் தங்கவில்லை. தாய் பெறும் குழந்தைகள் குடும்பத்துக்குச் சொந்தமாகவிருந்தன. பிள்ளைகள் தந்தையரை அறியார். ஆகவே பிள்ளைகள் தாய்வழியால் அறியப்பட்டனர். தந்தைக்கும் பிள்ளைக்கும் எவ்வகைத் தொடர்பும் உண்டாகவில்லை. பெண்ணுக்கும் ஆடவனுக்கும் கணவன் மனைவி என்னும் கடமைகளும் தோன்றவில்லை.[8]

---

8. The fatherhood is not taken into account when the sexual bond is a loose one, and under such circumstances the descent can only be reckoned on the mother side. The sense of father-hood was a later development and in premitive times the child was held to be allied by blood with the mother and not with the father - Premitive Family - C. N. Starke.

## பெண்களின் பல தார மணம்

இயற்கைத் தெரிவு ஆண்களுக்கன்று பெண்களுக்கே உரியது என முன்னோரிடத்திற் படித்தோம். பருவமடைந்த பெண்கள் சந்ததி விருத்தியின்பொருட்டுத் தகுதியுள்ள ஆடவரைத் தெரிந்தெடுத்தனர். இவ் வழக்கிலிருந்து பெண்கள் தாம் விரும்பிய பலரைக் கணவராகத் தெரிந்தெடுக்கும் வழக்கு வளர்ச்சியடைந்தது. அவர்கள் பெண்ணினால் வரையறுக்கப்பட்ட முறைப்படி அவளை அடைந்தார்கள். இவ்வுலகம் முழுமையிலும் இவ்வகை மணங்களே நடைபெற்றன.[9] இன்றும் சிற்சில நாடுகளில் காணப்படுகின்

---

The wife though she should grieve at her husband's death though often she really and sincerely does so remains but a stranger by the rules of maternal kinship. A woman and her brother are bound to each other by characteristic and highly important ties of kinship. The brother became the natural warder of her children, who therefore have to regard him and not their father as the legal head of the family - Crime and custom in savage life - pp. 34, 34 - B. Malinowski.

9. In Ladakh women who have two, three, four or even five husbands, have and generally use the right of selecting additional husbands or lovers who are known as "Magfa". The supplementing husband is regarded as the property of the wife; she can dismiss him whenever she chooses and take another. The women as a general rule avail themselves of these previleges; among the Thodas also the women exercise the right to have recognised lovers in addition to their regular husbands. In Ceylon according to Tennant the women of noblest birth and wealth had the most husbands. So elsewhere in the Marqusas it was with princesses that polyandry on the most extensive scale

றன. இவ்வகை மணங்கள் நடைபெற்றகாலத்தில் வியபி சாரமென்பது பொருளற்றதாயிருந்தது. தந்தை ஆட்சிக் காலத்திலேயே வியபிசாரம் என்னும் குற்றச்சாட்டை உணர்ந் தும் சொல் உண்டாயிற்று.10

---

was practised. Amongst the Aleuts according to Bancript, it was the wealthiest women and those whose position was therefore of greatest influence who were the most polyandrous in their relations. Noble women and heiresses of Madagascar have many lovers as they choose. In Arabia high born women refused to bend themselves to one man by marriage and claimed complete freedom in the disposal of their favours - The Mothers Vol. 2 - p. 258.

"லாடாக் நாட்டுப் பெண்கள் இரண்டு, மூன்று அல்லது நான்கு ஐந்து கணவரைத் தெரிந்தெடுத்துக் கொள்கின்றனர். அவர்களுக்கு மென்மேலும் கணவரைத் தெரிந்தெடுக்கும் உரிமை உண்டு. அவர் கள் தெரிந்தெடுக்கும் கணவருக்கு மெக்வா என்பது பெயர். மேலும் தெரிந்தெடுக்கும் கணவர் பெண்ணின் சொத்தாகக் கருதப்படுகின்ற னர். அவள் விரும்பிய எந்தநேரமும் கணவனைத் துரத்திவிடலாம்; விரும்பியபோது இன்னொருவனைத் தெரிந்துகொள்ளலாம். தோடர் வகுப்புப் பெண்களுக்கும் இவ்வகை அதிகாரம் உண்டு. இலங்கையில் உயர்குலப் பெண்களும் சீமாட்டிகளுமே அதிக கணவரை உடைய வர்களாயிருந்தனர் என்று நோக்ஸ் கூறியுள்ளார். மார்குசஸ் என்னும் தேசத்தில் அரச குடும்பப் பெண்களே பல கணவரை வைத்திருந்தார் கள். அலுஎற் என்னும் நாட்டில் சீமாட்டிகளே அதிக கணவரை உடையராயிருந்தனர். மடகாஸ்கரில் சீமாட்டிகள் தாம் விரும்பிய பல கணவரைத் தெரிந்தெடுப்பார்கள். அராபியாவில் உயர்குலப் பெண்கள் ஒருவனுக்குப் பணிவதை மறுத்தார்கள். அவர்கள் தாங் கள் விரும்பியவாறு தமது தயவை விரும்பிய பிறருக்கு அளிக்கும் சுதந்திரம் பெற்றிருந்தார்கள்."

10. The adultary is an offence under patriarchal but not under matriarchal conditions - Ibid p. 207.

## நாயர் சாதியினரும் அவரின் திருமணங்களும்

மலையாளத்தில் நாயர் என்னும் ஒரு வகுப்பினர் காணப் படுகின்றனர். இவர்களின் மணமுறை பழைய தாய் வட்ட மணமுறையை ஒத்தது. நாயர்க் குடும்பங்கள் தாய் வட் டங்களாகவுள்ளன. ஒவ்வொரு குடும்பத்துக்கும் தாயே தலைவியாவள். அவர்களுக்குள் நிலையான திருமணங்கள் இல்லை. நாயர்களும் நம்பூதிரிகளும், பெண்ணின் சகோதரனது விருப்பத்தைப் பெற்றுப் பெண்ணைச் சம்மந்தம் வைத்துக் கொள்வார்கள். சம்பந்தமென்பது சிலகாலத்துக்கு மாத்தி ரம் இருபாலாரும் கணவன் மனைவியாக இருக்கும் உடன் படிக்கை. எப்பொழுது இருவரில் எவருக்கு இக் கூட்டுறவு பிடிக்கவில்லையோ அப்பொழுதே அவர்கள் அதனை வெட்டி விடுவர். பின்பு அவர்கள் தமக்கு விருப்பம்போல் வேறு வேறு சம்பந்தங்களை வைத்துக்கொள்ளலாம். தந்தையின் சொத்தில், பிள்ளைகளுக்கு யாதும் உரிமை இல்லை. பிள்ளை கள் தாய்வட்டத்தைச் சேர்ந்தனவாகும். தாய் வட்டத்துக் குரிய சொத்திலேயே அவைகளின் வாழ்க்கைச்செலவு நடை பெறுகின்றது. தாயின் உடன்பிறந்தானுக்கே பிள்ளைகளைப் பாதுகாக்கும் உரிமை உண்டு. அவனுடைய சொத்து அவ னுடைய பிள்ளைகளைச் சேராது மருமக்களையே சேர்கின்றது.

பல ஆடவரை ஒரேகாலத்தில் கணவராகக் கொண்டு ஒழுகும் ஒழுக்கம் நாயர்ப் பெண்களிடத்தில் உண்டு. இதனை அவர்கள்சமூகம் தவறானதென்று உணர்வதில்லை. தந்தையின் சொத்துப் பிள்ளைகளை அடையாமல் மருமக் களை அடையும் வழக்கு மருமக்கள்தாயம் எனப்படும். திருவிதாங்கூர் அரசுரிமையும் இவ்வகையினதே. இராணி எனப்படுபவர் அரசனின் மனைவியல்லள்; அவனின் உடன்

பிறந்தாளே. அரசுரிமை அவளுடையதே. அரசியின் மூத்த பெண்ணுக்கே அரசுரிமை செல்கின்றது.

நாயர்ப் பெண்கள் பன்னிரண்டு கணவர்வரையில் உடையவர்களா யிருந்தார்கள் என்பதற்கு எழுத்து வகையான ஆதாரங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு கணவனும் மனைவியால் வகுக்கப்பட்ட முறைப்படி ஒவ்வோர் நாளில் அவளை அடைவான். பெரும்பாலும் அக் கால எல்லை ஒரு நாள் மத்தியானம் முதல் அடுத்தநாள் மத்தியானம் வரையுமாகவிருந்தது. இவ்வகை வழக்கு இந்தியாவில்மாத்திரமன்று உலகம் முழுமையிலும் இருந்துவந்தது.[11]

## தாய்க் கடவுள்

தாயே எல்லா அதிகாரமுடையவளாயிருந்தாள். அக் காலத்தே மக்கள் எல்லா அதிகாரமுமுடைய தாயைக் கடவுளாக வழிபட்டனர். உலகில் முதன்முதல் தாய் வழிபாடே

---

11. Polyandry, the traces of which are still to be found among many castes and tribes of Southern India was not prohibited among the Nayars until, as late as nineteenth century. The maximum number of legitimate husbands for a noble Nayar lady according to various reports seems to have been twelve. Each husband had the right to remain with his wife in turn, punctually regulated and reckoned in turn, punctually from mid-day to mid-day—Mother Right in India - p. 61 - Baran Omar Ralf Ehreneels.

Under the Kandian laws polyandry as well as polygamy was allowed without limitation as to the number of husbands or wives. A women usually had two husbands and there are cases where women had as many as seven - The custom of polyandry as practised in Ceylon—J. A. Gunaratna.

உண்டாயிற்று என மக்கள் நூலார் ஆராய்ந்து கூறுகின்றனர். எல்லா அதிகாரமுமுடைய தாய்க்கு விலங்குகளுக்குள் வீரமுடைய சிங்கம் வாகனமாக்கப்பட்டது. அவளே வீர தெய்வம் (கொற்றவை) ஆகவும் விளங்கினாள். உலகில் எல்லாப் பாகங்களிலும் தாய்க் கடவுள் கன்னித் தெய்வமாகவே கொண்டு வழிபடப்பட்டாள். முற்காலத் தாய் பிள்ளைகளைப் பெற்றபோதும் கலியாணமாகாதவள் என்றே கொள்ளப்பட்டாள். கலியாணம் என்பது கணவன் மனைவி என்னும் முறையில் ஒருமித்து வாழுதல். தாய்க் கடவுள் கன்னி எனப்படுதல் ஆதிகாலத் திருமண முறையை ஒருவாறு விளக்குவதாகும்.[12]

## விலங்குக் கூட்டங்களைத் தலைமை தாங்கிக் காப்பது பெண்ணே

காடுகளிலே விலங்குகள் கூட்டங்களாக வாழ்கின்றன. ஆபத்து நேரும்போது முன்னேவந்து அவைகளைக் காப்பது மூத்த பெண் விலங்கேயாகும்.[13] இதுவே இயற்கை

12. The older and important deity is always the female partner of the divine couple. Everywhere she is unwed—Mother Right in India - p. 190.

13. The actual leader which guides the herd in its movements and keeps watch against possible dangers is usually an old female. The buffalo herds are likewise led by an old cow. The female leadership is common to most if not all horned ruminants. There is in fact one way, and one only by the feminine constitution of the family could have been maintained while it expanded at the same time into a larger assembly, namely, by the sons leaving the group and the daughters remaining and pairing with males from some other group—The Mothers Vol. 2. P. 185.

விதிபோலும். மக்களுள்ளும் மூத்த பெண்ணே தலைவியா யிருந்தாள் என்று முன் படித்தோம். பெண்கள் ஆடவ ரிலும் பார்க்கச் சிறந்த போர் வீரியரா யிருந்தார்களென்று நாம் வரலாறுகளிற் படிக்கின்றோம்.

## போர்வீரப் பெண்கள்

"கனெரியிலுள்ள குவாஞ்செஸ் (Guanches) பெண் கள் அணிகளில் நின்று போர் செய்தனர். மொரக்கோவி லுள்ள பேபர் (Berber) பெண்கள் குதிரைகள்மீது ஏறிச் சவாரிசெய்து போர் புரிவர். அராபியரின் வரலாற்றில் பெண் போர்வீரர்களைப்பற்றிய செய்திகள் பெரிதும் காணப் படுகின்றன. பெண் போர்வீரர்கள் பலதடவைகளில் போர் முனையிற் றோன்றி யுத்தப்போக்கை மாற்றித் தமது உடன் பிறந்தார், கணவர், பிரதானிகளின் உயிர்களைக்காத் திருக் கின்றனர். வகாபியின் (Wahabi)யின் மனைவியாகிய காலியா என்பவள் மகமத்அலி என்பவனைப் போர்முனையில் பலதடவை எதிர்த்தாள். வான்ரி (Fanti) மக்களுள் பெண்களும் ஆடவருடன் பக்கத்தே நின்று போர்புரிந்த னர். சான்சிபார் சுல்தானிடத்தில் 1000 பெண் போர் வீரர் நிலையாக இருந்தனர். மத்திய ஆசிய, தாத்தாரிய பெண்கள் மிகவும் வீரமுடையவர்களாக விளங்கினார்கள். அவர்கள் ஆடவரிலும் பார்க்க வேகமாகக் குதிரைகளைச் செலுத்திப் போர் செய்தார்கள். சீயம் (Siam) அரசன் பெண் காவலாளரை வைத்திருத்தல் வழக்கு. கண்டி அர சனும் இவ்வாறு விற்பிடித்த பெண் காவலரை வைத்திருந் தான். பாரசிக அரசன் 'அமேசன்' மெய்காப்பாளரை அமர்த்தியிருந்தான். சித்திய (Scythian) பெண்கள் ஆட வரை ஒப்பப் போர் புரிகின்றார்கள் எனக் கெரதோதசு

கூறியுள்ளார். கெல்திய (Celt) பெண்கள் ஆடவரின் இடை இடையே நின்று போர் புரிந்தனர். அயர்லாந்தின் இலக்கியங்கள் பெண்வீரர் பலரைப்பற்றிக் கூறுகின்றன."14

பெண்கள் ஆடவரை ஒப்ப அல்லது அவர்களிலும் திறமையாகப் போர்செய்யும் திவன் அடைந்திருந்தார்கள். தந்தை ஆட்சிக்காலத்தில் அவர்கள் ஒடுக்கப்பட்டு வீட்டில் அடைக்கப்பட்டார்கள். பல தலைமுறைகளாக அவர்களின் வீரம் பயன்படுத்தப்படாமல் இருந்தமையின் அது நாள் வீதம்குன்றி மறைந்துவிட்டது. இன்று பயம் அல்லது கோழைத்தனத்துக்குப் பெண்கள் எடுத்துக்காட்டாக எடுத்துக் காட்டப்படுகின்றனர்.

## பழைய எகிப்து மேற்கு ஆசிய நாடுகளிற் சொத்துரிமை

பழைய 15 எகிப்தில் ஆவணங்களில் (Documents) கணவனின் பெயர் காணப்படவில்லை. பில்லோமீற்றர் (Philometer) என்னும் அரசன் கணவனின் உரித்தையும் புகுத்துதற்கு மனைவி எழுதும் ஆவணங்களுக்குக் கணவனும்

---

14. The Mothers Vol. 2 - p. 454.

15. Where (in Egypt) women held a position more free and more honourable than they have in any country today, Diodorus affirms that in a Egyptian family it is the man who is subjected to women. "All this explaining why the queen received more power and respect than the King, and why among private individuals, the woman rules over the man, and that it is stipulated between married couples by the terrors of the marrying contract that the man shall obey the woman" (*Diodorus*)—The position of woman in premitive society.

கையெழுத்திடல்வேண்டும் என்னும் சட்டத்தை உண்டு பண்ணினன்.

"சகரா வனாந்தரங்களிலுள்ள டௌரெக் (Touareg) பெண்கள் தாய் வழி உரிமையையே பெற்றிருந்தனர். பபிலோனிய மகளிரும் எகிப்திய பெண்களைப்போலவே தாயாட்சி உடையவர்களாயிருந்தார்கள். அவர்கள் தம் உடன்பிறந்த ஆடவரைப்போலவும் கணவரைப்போலவும் எல்லாவற்றிலும் சம உரிமை பெற்றிருந்தனர்." கிரேத்தா (Crete) மக்கள் கிரேத்தாவை தாய்நாடென்றே கூறினர்; தந்தை நாடென்று கூறவில்லை எனப் புளூற்ருக் (Plutrach) என்னும் வரலாற்ருசிரியர் கூறியுள்ளார். பழைய அதேன்சில் பிள்ளைகள் தாய்வழியால் அறியப்பட்டார்கள். கிருெராப்ஸ் (Cecrops) அரசன் காலத்தில் இவ்வகை வழக்கு இருந்தது. இலிசியாவில் தாயாட்சியே இருந்த தெனக் ஹெறதோதசு கூறியுள்ளார். கிரேத்த (Crete) பெண்களுக்கு எகிப்திய பெண்களைவிட அதிக அதிகாரம் இருந்தது. காசிஸ் (Khasis) என்னும் இடத்தில் ஆண் கடவுளரின் முன்னர் பெண் கடவுளர் வைக்கப்பட்டிருக் கின்றனர். கிரேக்கர் வழிபட்ட எட்டு முக்கிய கடவுளரில் ஐவர் பெண்பாலினர். ஸ்பேயினில், தாய் தந்தை என்னும் இருவரின் பெயர்களையும் இணைத்துப் பிள்ளைகளுக்குப் பெயர் இடப்பட்டது.[16]

பழைய மெசபெத்தேமியாவில் பெண்கள் ஆடவரை ஒத்த உரிமைபெற்று விளங்கினர். மணமான பெண்க ளுக்கும் மணமாகாத பெண்களுக்கும் சொத்துரிமை இருந் தது. பெண்கள் தாம் விரும்பியவண்ணம் (கணவனின்

16. Ibid.

உடன்பாடின்றி) பணக் கொடுத்தல் வாங்கல் சம்பந்தமான கருமங்களைச் செய்தார்கள். பெண்கள் வாணிகமும் புரிந்தனர்; தேசாதிபதிகள் எழுத்தாளர்களாகக் கடமை ஆற்றினர்; ஆலயங்களில் குருத்தியராக (Priestess) விருந்தனர்; அவர்களுக்குப் பெருஞ் செல்வாக்கும் பொருளும் இருந்தன. எகிப்திய பெண்கள் தாய் தந்தையரைப் பராமரிக்கக் கடமைப்பட்டிருந்தனர். அவர்கள் ஆடவரை ஒப்ப எல்லாத் தொழில்களும் புரிந்தனர்; பயிரிடுந் தொழிலிற் பலர் ஈடுபட்டிருந்தார்கள். நான்காவது அல்லது ஐந்தாவது எகிப்திய பரம்பரைக்காலத்தில் எழுதப்பட்ட ஓவியமொன்றில் பெண் ஒருத்தி கப்பல் ஓட்டுகின்றாள்.[17] மக்களின் வாழ்க்கை ஆரம்பத்தில் தொடங்கிய தாயாட்சி, காலத்தில் சிறிது சிறிதாக மாறுதலடைந்து இறுதியில் தந்தை ஆட்சியுட் புகுந்து மறைந்துவிட்டதென வரலாற்றாசிரியர்கள் கூறுவர்.[18]

---

17. Universal History of the world Vol. fi.

The ancient Egyptian women had their own right of property; the sons were named after their mothers; the ancient inscriptions more often show a genealogy of the mothers than that of the father's property. Right of princes were inherited by the daughters not by the son's son. As late as the 4th century there existed in Egypt a matrirchal side, with matriarchal form of marriage enabling a girl to choose her husband herself and to divorce him after a payment of fixed fine.—*Mother Right in India.* P. 194.

18. Matriarchal culture circle is now considered to have extended over a larger period commencing earlier and longer in the course of Evolution —Mother Right in India. P. 8.

## ஆண்களைச் சீர்திருத்தினவர்கள் பெண்களே

இவ்வுலகில் வாழும் எல்லா ஆண் பெண் உயிர்களுள் ஆண்கள் வலிய தன்மையுடையனவாகவும் பெண்கள் மென்மைத் தன்மையுடைனவாகவும் காணப்படுகின்றன. ஆண்கள் மூர்க்க குணமும், முரட்டுத்தன்மையும் போர் விருப்பும் உடையன. ஆண்களிடத்தில் ஆக்கும் குணங்களினும் பார்க்க அழிக்கும் குணங்களே பெரிதும் காணப்படுகின்றன. பெண்களிடத்து இயல்பாக மென்மைக் குணங்களுண்டு. அவை பிள்ளைகளைப் பெற்று அவைகளைக் கருத்துடன் பாதுகாக்கும் இயல்பினுல் அன்புதோன்றி மென்மைக் குணங்களோடு வளர்ச்சியடைகின்றது. அவ் வன்புக் குணங்கள், அவ் வுயிர்கள் பெறும் குழந்தைகளிடத்தும் தலைமுறை தலைமுறையாகச் சுவறி வளர்ச்சியடைகின்றன. இம் முறையினுலேயே போர்க்குணமும் முரட்டுச் சுபாவமுமுடையவர்களாயிருந்த ஆடவர் நீண்டகாலத்தில் சிறிது சிறிதாக சாந்தகுண முடையவர்களாக மாறியுள்ளார்கள் என ஆராய்ச்சி வல்லார் கூறுகின்றனர்.[19]

---

19. My study in the palaeo - ethnology and prehistoric anthropology have shown me that woman bas played greater part in the progress of civilization in the softening of manners—Prof. D. E. Mortiller - Year book of facts.

Woman becomes in general tenderhearted, merciful, compassionate towards all males—towards animals and all living things; and even towards plants, flowers, inanimate things, possessions which are handed gently and tenderly, where as the male is disposed to be rough, to destroy and break - The Mothers Vov. 2 - p. 146.

Not a few reasons remain for seeking a fresh term (say Matri - primal ?) to express the highly important and in

பெண்கள் பொதுவில் இளகிய மனமும் இரக்கமும், ஆடவரிடத்தில் உருக்கமுடையவர்களாகவும் இருக்கின்றனர். அவர்கள் பறவைகள் விலங்குகள் முதலிய எல்லாச் சிற்றுயிர்களிடத்திலும் இவ்வியல்பினர்; தாவரங்கள் பூக்கள், பிற அஃறிணைப் பொருள்கள், தாம் வைத்துப் பயன்படுத்தும் பொருள்கள் முதலியவைகளை மென்மையாகவே எடுத்துக் கையாளுவர். ஆடவரோ அவைகளை முரட்டுத்தனமாகப் பயன்படுத்தி ஒடித்து விடுவர்—தாய்மார்.

முற்பட்ட சமூகத்தில் தாயே முதன்மை இடத்தைப் பெற்றிருந்தாள். தாய்க் கடவுளைப்பற்றி வரும் பழங்கதைகளாலும், பயிர்த்தொழிலை விருத்திசெய்து வீட்டு வாழ்க்கையையும் நாகரிகத்தையும் வளர்த்தமையாலும், பிள்ளைகளுக்குக் கல்வி கற்பித்து சமூகத்துக்குப் புத்திமதி கூறும் தன்மையினாலும் தாய் மிக முக்கியம்வாய்ந்தவள். அமெரிக்க சிவப்பிந்தியர்களுக்குத் தாயே ஆலோசனை கூறுவாள். இந்தியாவின் தென்மேற்குக் கரைகளில் வாழும் நாயர்ச்சாதி

---

various ways even predominant influenc of women in early society. As from the well founded traditions of mother goddess to the substantial initiatives and attributions of women as inventor and civilizer of these conspicuously in the domestic and in the agricultural life; as well as educator of children and counseller of the tribe, as markedly among Red Indisn tribes, so far even to this day among other survivals the matrilinear family system of the Nairs of S. W. India is conspicuously associated with a high status of women, and a good deal of civilization while its antiquity and that in high esteem is further confirmed by the tradition of various ancient civilizations and religions - Life outlines of general Biology - P. 1188 - J. Arthur Thomson.

யினருள் தாயே முதன்மை இடத்தை வகிக்கின்றாள். உலகின் பழைய நாகரிக வரலாறுகளையும் சமய வரலாறுகளையும் பயிலுமிடத்துத் தாயே முக்கிய முடையவாளாக விருந்தாளென்னும் உண்மை நன்கு புலனாகின்றது—பிராணி வரலாற்றின் காட்சி.

## தாயாட்சியும் சொத்துரிமையும்

தாய் ஆட்சி குடும்ப ஆட்சியாகவே இருந்துவந்தது. தனிப்பட்டவர்களுக்குச் சொத்து இருக்கவில்லை. குடும்பச் சொத்து எல்லோருக்கும் பொதுவில் இருந்தது. குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் புதிதாகத் தேடும் சொத்தும் குடும்பத்தைச் சேர்ந்ததாகவே கொள்ளப்பட்டது. பெரும்பாலும் சொத்துக்கள் நிலம்போன்ற அசைவற்ற பொருள்களாக விருந்தன. அவை பெண்களுக்கே உரியன. வில்லு அம்பு போன்ற சில அசைவுடைப் பொருள்களே ஆடவருக்குரியனவாயிருந்தன. அவர்கள் இறந்தபோது அவை அவர்களுக்கு அடுத்த உலகிப் பயன்படும்பொருட்டுச் சமாதிகளுள் வைக்கப்பட்டன.

## தாயாட்சியின் வீழ்கையும் தந்தை ஆட்சியின் தொடக்கமும்

தொடக்கத்தில் பெண்களே சொத்துக்குரியவர்களாயிருந்தார்கள். பெண்களை மணந்துகொள்வதால்மாத்திரம் ஆடவர் சொத்தைப் பெறக்கூடியவர்களானார்கள். பயிரிடுதல் கைத்தொழில்போன்றவை, நீண்டகாலம் பெண்கள் கையிலேயே இருந்தன. ஆடவர் இத் தொழில்களிற் பங்கு பற்றாது அலைந்து திரிவோராகவும் வேட்டையாடுவோராகவும் இருந்தனர். பெண்களின் பயிர்த்தொழிலுக்குரிய கருவிகள் மண்வெட்டி பாரை போன்றவை. அவர்கள் எருதுகளைக் கலப்பையிற் பூட்டி உழ அறிந்திருக்கவில்லை.

பின் கலப்பையில் எருதுகளைப் பூட்டி நிலத்தைஉழும் முறை கண்டுபிடிக்கப்பட்டது. இதனால் அதிக நிலத்தை உழுது பயிரிட்டு அதிக தானியங்களை விளைவிக்கக்கூடியதாக விருந்தது. ஆடவர் ஏரைப் பிடித்து உழத் தொடங்கினர்கள். அதனால் அதிக உணவு கிடைத்தது. ஆகவே அவர்கள் அலைந்து திரியும் வாழ்க்கையை விட்டு ஓரிடத்தில் தங்குவாராயினர். இதுவரையில் பெண்கள் செய்துவந்த பயிர்த் தொழில் கைத்தொழில் என்பன சிறிது சிறிதாக ஆடவர் கைக்கு மாறின. பெண்கள் வேலையற்றவர்களாக வீட்டிற் றங்கினர்கள். அவர்களின் பொருள் வருவாய் குன்றிற்று. அவர்கள் தமது வாழ்க்கைக்கு ஆடவர் கையை எதிர்பார்க்கும் நிலைமை உண்டாயிற்று. வெளியிற் சென்று வெய்யிற் காய்ந்து வேலை செய்யாமையால் அவர்களின் மேனி சிறிது சிறிதாக அழகுபெற்றது. மேனி மினுக்குப் பொருள்களாலும், அழகிய ஆடைகளாலும் அவர்கள் தம்மை அலங்கரித்தனர். அவர்களின் அழகு ஆடவரின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. அவர்கள் அழகின் மிக்க பெண்களைத் தமக்கே உரிமையாக்கிக் கொண்டு வாழ விரும்பினர்கள். ஒருவன், தான் சொந்தமாக்கிய பெண்ணோடு இன்னொருவன் நட்புக்கொண்டிருப்பதை விரும்பவில்லை. ஆகவே அவள் மற்றவர்களுடன் அளவளாவி நட்புக்கொள்ளாதபடி அவளை வீட்டில் இருக்கும்படி செய்தான். இது வரையில் வெளியிற் சென்று பெண்கள் சேகரித்துவந்த வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களை இவனே சேகரித்து வருவானுயினான். இவ்வகை வாழ்க்கை நாளடைவில் உறுதிப்பட்டது. அப்போது ஆணுக்கும் பெண்ணுக்கும் தனி தொடர்பு உண்டாயிற்று. பிள்ளைகள் பிறந்தன. அப்பொழுது ஆடவன் தனது சொத்துப் பிள்ளைகளைச்

சேர வேண்டுமென்று விரும்பினான். இப்பொழுது தாய் தந்தை என்னும் இருவரின் சொத்தும் பிள்ளைகளைச் சேர்வதாகிய மக்கள் தாயம் உண்டாயிற்று. மருமக் கட்டாயமும் தாயாட்சியும் படிப்படியே மறைந்தன[20].

---

20. Individual marriage has its foundatien in economic relations. Individual economic associations between sexual partners have inevitably tended to establish individual sexual claims. The married woman tends in time to become to be prohibited to all but to her individual associate......Marriage by giving a woman to her husband merely separates her in common with others.......It has been supposed that exclusive personal claims over women arise originally in the most premitive human societies in consequence of masculine jealousy. Matriarchal society survived until the dawn of culture brought about by contact with the rich civilization of the Orient; and the man came as a suitor to the woman, through her alone he could enter into possessions of the land ......Women had long ceased to be cultivators of the soil. Their traditional ownership of it by transmission of property in the feminine line, was, as have been seen readily circumverted and reduced to legal function. They possessed no other economic advantages. The regular and assured agricultural food supply had released the men......The corn field abolished the economic importance of the hunter. The economic function of the female came to an end. He was set free for other avocations. Ho had yoked his oxen to the plough; he had by degrees taken over the bulk of agricultural labour. The industries which had hitherto been exclusively in the woman's hands passed into those of men. The household crafts which had originated with the household worker, pottery, woodwork, rude building, weaving etc. became masculine industries. They became generally extended

## தந்தை ஆட்சியும் இயற்கைத் தெரிவும்

இயற்கைத் தெரிவு பெண்களுக்கே உரியது என்று முன் விளக்கப்பட்டது. இவ்விற்கை விதி இப்பொழுது மாறத் தொடங்கிற்று. இப்பொழுது ஆடவனேதான் விரும்பிய பெண்ணைத் தெரிந்தெடுக்க ஆரம்பித்தான். இவ்வாறு ஆடவன் பெண்ணைத் தெரிந்தெடுக்கும் முறைகள் பலவாறு வளர்ச்சி யடைந்தன. சில மக்கட் கூட்டங்களில் ஒருவன் ஒரு பெண்ணை மணக்க விரும்பினால் அவன் அவள் தந்தை வீட்டில் ஒரு ஆண்டு வரையில் தங்கி அவன் செய்துவரும் தொழில்களுக்கு உதவியாக விருந்தான். பெண்ணின்

---

through the trading activities of the caravan driver and the seafarer. The fertility of the land had released the men; they took over the work of the women. The latter from being the workers were left idle. Thus the great economic revolution brought about by agriculture which is accentuated for a while the matriarchal character of the archaic societies which transformed had ultimately of the opposite result. In the end no economic change established male supremacy more firmly and overthrow matriarchal society so completely. The sexual division of labour upon which the social development had been founded in premitive societies was abolished. Women instead of being the chief producer, became economically unproductive, destitute and dependent.

The contact between the toiling premitive woman and the idle lady of civilization has been mistaken for an indication of enslavement of the former and the freedom of the latter marks the opposite relation. It is the premitive toiler who is independent and the employed woman who has lost her freedom, and is destitute - The Mothers Vol. 2 - p.p. 50, 51.

தந்தை அவனது தொழில் செய்யும் திறமையில் திருப்தி யடைந்தால் அவன் தன் புதல்வியை அவனுக்கு மனைவியாகக் கொடுத்தான். சில கூட்டத்தினர் பெண்ணின் தந்தைக்குப் பணத்தைக் கொடுத்துப் பெண்ணைப் பெற்றனர். இவ்வழக்கின் தேய்வே இன்று தமிழ் மக்களிடையே பரியம் என வழங்குவது. இது பெண்ணின் தந்தைக்குத் தான் பெண்ணைக் கொள்ளத் தகுதியுடையவன் என்பதைக் காண்பிப்பதற்கு மணமகன் கொடுக்கும் பொருளாகும். இவ்வழக்கமே பெண்களை மனைவியராக விலைகொடுத்து வாங்கும் வழக்காகவும் மாறியுள்ளது[21].

## எகிப்தில் தாய் சொத்தும் தந்தை சொத்தும் பிள்ளைகளைச் சேரும்படி சட்டஞ் செய்யப்பட்ட வகை

பெண்களைப் போலவே ஆடவரும் சொத்து உடையவர்களா யிருந்தார்கள். அக்காலத்தும் சட்டப்படி தாயின் சொத்தே பிள்ளைகளைச் சேர்வதாயிருந்தது.[22] ஒரு பெண்ணை மணக்க விரும்பிய ஆடவன் தன் சொத்து முழுவதையும்

---

21. We can see the growth of purchase marriage in the service demand by the parents of the bride, this taking the place of the earliest custom of the bridegroom proving his fitness by test of strength - Position of woman in premitive society - p. 248.

22. The law of female inheritance must at one time have been universal......The husband's property was made over by deed to the wife (at first entire and afterwards in part) to secure its inheritance by the children of the marriage. It was in such wise way the Egyptians arranged the difficult problem of fusing of mother right with father right - Position of women in premitive society - p.p. 249, 214.

அல்லது அதன் ஒரு பகுதியை பெண்ணுக்கு எழுதிவைத்தான். தாய் தந்தை என்னும் இருவரின் சொத்தும் பிள்ளைகளைச் சேரும் பொருட்டுச் செய்யப்பட்ட முறை இதுவாகும். இவ்வாறு தாயின் உரிமையோடு தந்தையின் உரிமையையும் பிள்ளைகள் பெறலானுர்கள்.

ஆடவன் பெண்ணின் தந்தையின் கீழிருந்து பணிசெய்தும், பணிக்குப் பதில் பொருள் கொடுத்தும் பெண்ணை மனைவியாகப் பெற்ற காலத்தில் பெரும்பாலும் பெண், சொத்துடையவளாய் இருக்கவில்லை. பெண், சொத்தில்லாதிருந்த காலத்திலேயே ஆடவர் பெண்களை அடிமைப்படுத்தினுர்கள்.

இலங்கையின் வட பாகத்தில் தமிழ் மக்கள் வாழ்ந்து வருகின்றனர். அங்கு ஆண் பெண் என்னும் வேறுபாடு இன்றித் தாய் தந்தையரின் சொத்துப் பிள்ளைகளைச் சேருகின்றது. ஒரு ஆடவனும் ஒரு பெண்ணும் கணவன் மனைவியாக வாழ்க்கை நடத்திய காலத்தில் தேடிய சொத்தின் நேர்பாதி மனைவியைச் சேர்வதாகும். இவை தாய் உரிமை தந்தை உரிமைகளைப் பிள்ளைகள் அடையும் முறைகளிற் சில வாகும்.

## ஒருவன் பல பெண்களை மணத்தல்

ஆடவன் சொத்துடையவனுய் இருந்த காலத்தில் தந்தை ஆட்சி உண்டாயிற்று. தந்தை தாய் என்னும் இருவரும் சொத்துடையராயிருந்த காலத்தில் இருவரும் சம பெருமையுடையவர்களாகக் கருதப்பட்டார்கள். தந்தை ஆட்சி தாயாட்சியைச் சிறிது சிறிதாக விழுங்கி வலிமையடைந்தது. அஞ்ஞான்று பெண்கள் ஆண்களுக்குப் பணிந்து நடக்கும் படியான சட்டங்கள் ஆடவரால் வகுக்கப்பட்டன. தந்தை நிலத்தை உழுது பயிரிடுவதால் செல்வத்தை ஈட்டி

ஞன். குடும்பத்தில் எத்தனைபேர் அதிகமாக இருந்தார்களோ அவ்வளவுக்கு அதிக செல்வத்தை ஈட்டக்கூடியதாக விருந்தது. பல பிள்ளைகளையுடையவன் அவர்கள் மூலம் அதிக செல்வத்தை ஈட்டினுன். பொருள் ஈட்டும் விருப்புள்ள ஆடவர் பெண்கள் பலரை மணந்து பல பிள்ளைகளைப் பெற்ருர்கள்.

இதற்கு முற்பட்ட ஒரு காலத்தில் பெண் ஒருத்தியின் கணவரின் எண்களைக் கொண்டு அவளின் செல்வத்தையும் அதிகாரத்தையும் அளக்கத்தக்கதாயிருந்தது. இப்பொழுது ஒருத்தனின் மனைவிகளின் எண்களைக் கொண்டு அவன் செல்வத்தையும் அதிகாரத்தையும் அறியத்தக்கதா யிருந்தது.

## ஆடவர் மகளிர் என்னும் இரு பாலாரிலும் உயர்ந்தவர் யார்?

ஆண் பெண் என்னும் இரு பாலாரிலும் உயர்வாகக் கொள்ளத் தகுந்தவர் யார் என்னும் கேள்வி கேட்கப்படுகின்றது. அறிவாற் சிறந்த ஔவையாரே "அன்னையும் பிதாவும்" என அன்னையை முன்னுல் வைத்துக் கூறியிருத்தல் காண்க. பெண்ணின் கருப்பை, வயல்போன்றது. ஆடவன் அதிலே வித்தை வித்துபவன் போல்வாஞகின்ருன். நிலமின்றி வித்து முளைத்து ஓங்குமாறில்லை. வித்தின்றி வயலில் முளை தோன்றுமாறில்லை. இம் முறையைக்கொண்டு ஆண் பெண்களின் உயர்வு தாழ்வுகளை முடிவு செய்தல் முடியாது. இரு பாலாரும் தத்தமக்கு இயற்கையால் அளிக்கப்பட்ட கடமைகளை நிறைவேற்றுவதில் தனித்தனி பெருமையுடையவர்களாக விருக்கின்றனர்.

இவ்வுலகத்திலே ஆதியில் சத்தி (தாய்க் கடவுள்) வணக்கம், தாய் உயிர்களைத் தோற்றுவிக்கின்றாள் என்னும் பெருமைபற்றி எழுந்து நடைபெறுவதாயிற்று. இதனால் படைப்பு முறையில் ஆண்களிலும் பார்க்கப் பெண்களே சிறந்தவர்கள் என ஆதிமக்கள் கருதினார்கள் எனத் தெரிகின்றது. பண்டை நாளில் தமிழர் தாய், தந்தை என்னும் இருவரும் சம உரிமையினர் என்றேகருதி வந்தார்கள் இவ்வுண்மையினை அவர்களின் சமய நூலாகிய ஆகமங்களிற் காணலாகும்.$

## மந்தை மேய்க்கும் மக்களுள் பெண்களின் நிலைமை

மந்தை மேய்க்கும் மக்களுள் ஆடவரே சொத்துக்குடையவர்களா யிருந்தார்கள்; ஆகவே அவர்களிடையே தந்தை ஆட்சி வளர்ச்சி யடைந்தது. இவர்கள் வெளியிற் சென்று மந்தை மேய்ப்பவர்களாதலின் தம் மனைவியர் பிறருடன்

---

$ The later rise of patriarchal system and its spread as a social institution has been clearly associated with a different theory of the roll of the sexes. For here the dominant importance is given to the father whose all important seed is sown in the woman's field; a conception which goes naturally with the subordination of woman or man and must have generally helped to justify it even in her own eyes— Life outlines of general Biology.

$ The Agama favours both sexes equally, and makes no distinction between women and men. for men and women compose equally mankind. This sect holds women in great esteem and calls them Sakti - that is a woman - - To ill treat the Sakti is held to be a crime - Principles of Tantra P— XVIII - Avalon.

நட்புக் கொள்வதையோ, அல்லது நட்புக்கொண்டு தம்மை விட்டுப் பிரிந்து விடுவதையோ நினைந்து அஞ்சினர்கள். ஆகவே அவர்கள் பெண்கள் பிற ஆடவரை நோக்காதிருக்கும்படி அவர்களை வீடு அல்லது கூடாரங்களின் உட்புறங்களில் வைத்திருத்தல், அவர்களைத் தமக்குக் கீழ்ப்படுத்தி வைத்திருத்தல் போறை முறைகளைக் கையாளுவாராயினர். தொடக்கத்தில் மந்தை மேய்க்கும் நிலையில் இருந்தவர்களாகிய ஆரியர் இந்திய நாட்டில் வந்து குடியேறியபோது அவர்களின் பெண்கள் இவ்வாறு ஒடுக்கப்பட்டிருந்தார்கள் என்பது அபஸ்தம்பம் போதாயனம் முதலிய அவர்களின் பழைய நீதி நூல்களால் நன்கு விளங்குகின்றது. அவர்களுக்குக் கல்வி மறுக்கப்பட்டிருந்தது. பெண்களுக்கு வேதம் மறைக்கபட்டிருப்பதும் இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டாகும்.[23]

## தந்தை ஆட்சிக்காலத்தில் பெண்கள் ஆடுமாடுகள் போன்று ஆடவனின் உடைமைகளானுர்கள்

தந்தை ஆட்சிக்காலத்தில் பெண்கள் சொத்தில்லாதவர்களாயினர்கள். ஆடவன் தனது மனைவி மக்களை ஆடு மாடுகள் போன்று விற்கவும் வாங்கவும் கூடிய அசைவுடைப் பொருள்களாகப் பெற்றிருந்தான்.[24] அவ்வாறு விற்கவோ

---

23. The pastoral clan or tribe is usually patriarchal and aristocratic men keeping their power in their own hands. The office of tribal chief in most cases is hereditary. Woman far most wasplaced in a position of subjection - Human Ecology - p. 227 - J. W. Bews.

24. Among the ancient Romans in relation to the house father, all in the household were destitute of legal right. The wife and the children no less than the bullock or the slave - A Short History of marriage p. 137 - Edward Westermark.

வாங்கவோ இரவல் கொடுக்கவோ, அவனுக்கு அதிகாரம் இருந்தது. மேற்கு ஆசியாவிலும் கிரேக்க நாட்டிலும் ஒரு வகைச் சட்டம் வழங்கிற்று. ஒருவன் இன்னொருவனின் மனைவியோடு திருட்டுத்தனமான உறவு வைத்திருந்தால் அவன்மீது வியபிசாரக் குற்றம் சாட்டப்படவில்லை; திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டது. ஆகவே அவன் திருட்டுக் குற்றத்துக்குரிய தண்டனை அடைந்தான். வியபிசாரம் குற்றமென்று அவர்களாற் கருதப்படவில்லை.25 வியபிசாரம் செய்தவனுக்குப் பெரும்பாலும் பெண்ணின் கணவன் விரும்பிய தண்டனை விதிக்கப்பட்டது.

## தந்தை ஆட்சி உண்டானபோதும் தாயாட்சிக்காலத்திருந்த ஒழுக்கங்கள் அரைகுறையாக இருந்துவந்தன

தந்தை ஆட்சி தொடங்கிய போதும் பழைய வழக்கங்கள் திடீரென மறைந்துவிடவில்லை. பல நாடுகளில் கணவனின் உடன்பாட்டுடன் ஒரு பெண் பிற ஆடவரோடு நட்புக்கொண்டிருத்தல் குற்றமாகக் கருதப்படவில்லை. சில கூட்டத்தினரிடையில் திருமணத்துக்கு முன் நடக்கும் வியபிசாரம் ஒழுக்கக் கேடாகக் கருதப்படவில்லை. இவ்வாறு ஒழுக்கங்கள் மாறுபட்டன26.

---

25. Adultary however was not a sin against morality but a trespass against the husband—The Assyrian laws—G. R. Driver and John C. Miles.

26. Morals vary, therefore, as laws vary according to peoples and to times. The rules of morality form a second cord set above to social law, and they embody the larger aggrigate of duties—The world's History Vol. 1 - p. 46.

We have examples of general promiscuity, and examples of modified promiscuity, in whioh, with the pretence of marriage, the woman may bestow her favours upon any one, under certain restrictions as to rank and family. We have numerous examples of polyandry and they are such as to show the polyandry must be regarded as a modification of advance from promiscuity—Premitive marriage - p. 94—John Ferguson Mc. Lennen.

## மனைவியரை இரவல் கொடுத்தல்

உலகின் பல பாகங்களுக் கிடையில் மனைவியரை இரவல் கொடுக்கும் வழக்கம் இருந்து வந்தது. இது பலருக்கு வியப்பைத் தரலாம். கிரேக்கரிடமும் உரோமரிடமும் இவ் வழக்கம் சாதாரண வழக்கில் இருந்தன. கிரேக்கரின் தத்துவ சாத்திரியாகிய சொகிரதிஸ் என்பவரே தனது மனைவியாகிய சாந்தப்பையை தனது முதன் மாணுக்கராகிய அல்சிபியாதிஸ் (Alcibiades.) என்பவருக்கு இரவல் கொடுத்தார். இவ்வகை வரலாறுகள் கிரேக்க உரோமைச்சரித்திரங்களில் காணப்படுகின்றன.[27]

---

26. Spartan husband had no scruple in calling on a friend, or even a stranger to be the father of his children; it was proper for a Spartan matron to be mistress in two houses - Premitive marriage p. 10. - John Ferguson. Mc. Lennan.

It was their custom to surrender them even when they had two or three children by them, to other men, as Cato surrendered Marcia in our own time - Strabo.

27. Another custom which has been adduced as evidence of former communism in women is that which requires a man to offer his wife or one of his wives to a guest.........The custom of lending wives being found among many peoples of different parts. This sort of hospitality is frequently mentioned in Irish heroic tales - A short history of marriage - p. 14 - Edward Westermark.

For it is equally shared by the ancient Greeks and Romans who sold or lent their wives to their friends either for pleasure or procreation. So Plutarch describing the life of Lycurgas the Spartan law-giver wrote, "He laughed at those who revenge with wars and blood-shed the communi-

"கிரேக்கர் இன்ப நுகர்ச்சி கருதியோ பிள்ளைகளைப் பெறுதல் கருதியோ தமது மனைவியரை நண்பர்களுக்கு இரவல் அளித்தார்கள். ஸ்பார்ட்டன் மக்களுக்கு நீதிநூல் வகுத்த லைகுர்காஸ் என்பவர் மணமான பெண்களின் தயவைப்பெற முயன்றவர்களைப் பழிவாங்கும் பொருட்டுச் செய்யப்படும் போர்களைப் பற்றிப் பரிகசித்தார்; வயதின் முதிர்ந்த ஒருவன் இளம் மனைவியை வைத்திருந்தால் அவன் வீரமும் நேர்மையுமுடைய ஒருவனை அவளுக்கு அறிமுகப் படுத்தி அவன் மூலம் நல்ல குழந்தையைப் பெறுவதை அனுமதித்தார்; நல்ல ஒழுக்கம் உள்ள ஒருவன் விவாகமான ஒரு பெண்ணின் அழகைக் கண்டு அவள்மீது ஆசைப்பட்டால் அவன் அவள் கணவனின் விருப்பைப் பெற்று அவள் நட்பை அடைதல் தவறுடையதன்று எனவும் அவர் விதித்தார். பிள்ளைகள் பெற்றோருக் குரியனவல்ல அரசாங்கத்

---

cation of a married woman's favours; and allowed that if a man in years should have a young wife he might introduce to her some handsome and honest young man, whom he most approved of and when she had a child of the venerous race bring, bring it up as his own. On the other hand, he allowed that if a man of character should entertain a passion for a married woman on account of her modesty and the beauty of her children he might treat with her husband for admission of her company, that so planting under beauty bearing soil, he might produce excellent children, the congeanial offspring of excellent parents. Sycurgas justifies his regulation on the ground that children were not so much the property of parents as of the state was interal in seeing that they were begotten by the best men in it; the regulation was held to have had - the most salutary effect upon the morals of the woman themselves. The privilege of lending and

திற்குரியவை என்னும் காரணத்தை லைகுர்காஸ் என்பவர் தனது சட்டத்துக்கு ஆதாரமாகக் கொண்டார். அதேன்சில் மனைவியரை நண்பருக்கு இரவல் கொடுத்தல் நட்பின் அடையாளம் எனக் கருதப்பட்டது. சொகிரத்தஸ் என்னும் கிரேக்க ஞானியார் சாந்தப்பை என்னும் தனது மனைவியைத் தனது மாணுக்கரும் நண்பருமாகிய அல்சிபியாதிஸ் என்பவருக்கு இரவல் அளித்தார். காற்றோ என்பவர் தனது மனைவியாகிய மேரியா என்பவளை ஹொரென்சியஸ் என்பவருக்கு இரவலாகக் கொடுத்தார்"

## மனைவியரை மாற்றிக்கொள்ளுதல்

வட அமெரிக்காவில் வாழும் எஸ்கிமோவர் தமது இருப்பிடத்தை விட்டு அயலிடங்களுக்கு வேட்டையாடச் சென்று தங்குவார்கள். அவ்வாறு செல்லும்போது ஒருவனுடைய மனைவிக்கு அவனுடன் செல்லமுடியாத காரணம் எதுவும் இருக்குமாயின் அவளுடைய கணவன் அங்கு உள்ள ஒருவனிடம் தனது மனைவியைக் கொடுத்துவிட்டு

---

receiving a wife was esteemed a high privilege of the Spartan citizen and its forfeiture was deemed condign punishment reserved for serious delinquencies. The lending of wives to friends was regarded as one mark of favcur in Athens and Socretes is said to have lent his wife Xantippe to his young disciple and friend Alcibiades. That the wife was friendships offering illustrated in the life of Cato the younger. When he married his second wife Marria after divorcing Atlia, his friend Hortensius a man of great dignity and politeness requested Cato to lend him his married daughter Portia for the purpose of propogation. Cato answered that he had the greatest regard for the friendship of Hortensius but he could not think of his application for another man's

அவனுடைய மனைவியைத் தன்னுடன் அழைத்துச் செல்லுவான். அவன் திரும்பி வந்ததும் மற்றவனது மனைவியைக் கொடுத்துவிட்டுத் தனது மனைவியைப் பெற்றுக் கொள்வான். இது எவ்வகையிலும் ஒழுக்கத்துக்கு மாறுபட்டதாகக் கருதப்படுவதில்லை.

## கற்பு

பெண், கணவனுக்கு அடங்கி நடத்தலோடு கணவனை ஒழிந்த பிற ஆடவரோடு சேர்க்கை வைத்திருத்தல் கூடாதென்னும் கட்டுப்பாடு தந்தை ஆட்சிக் காலத்தில் உண்டா

---

wife. Whereupon Hortensius requested him to lend his own wife which Cato did not only lent but present to his friend with the consent of the ladies father. - The Hindu code p. XX - Dr. H. S. GOUR.

$ An Eskimo may oblige a visitor by surrendering his wife temporily, and a man coming from one settlement to another expects to be similarly treated by a member of his own age - An introduction to cultural anthropology - p. 244 - Robert H. Lowil.

It may be well to append some modern examples of promiscuity, and of practices which have the same effect in rendering uncertain male parentage. The Ansarians have their wives in cammon; the Kaias (Paropamisans) lend their wives to their guests; so do the Eimauk (Caubul), so we are informed of the Kandyans. The Mpongme (Africa) lend wives - Premitive marriage p. 96.

Exchange of wives are habitual among Eskimos. This is due often as a matter of convenience......If a man's wife is unable to accompany him on a hunting party, he will exchange her for the wife of some man who is staying behind. - The Mothers Vol. 2 - p. 10.

யிற்று, இக்கட்டுப்பாட்டைக் கடைப்பிடித் தொழுகுதலே கற்பு எனப்பட்டது.) திருமணத்துக்குப் பின்பு பெண்கள் கணவனுக்குக் கட்டுப்பட்டே நடந்து வந்தார்கள். ஆனால் திருமணத்துக்கு முன்பு பெண்கள் தமது தயவைத் தாம் விரும்பிய ஆடவருக்கு அளித்து வந்தார்கள். திருமணத்துக்கு முன் பெண்கள் ஆடவர் பலருடன் சேர்க்கை வைத்துக்கொள்வதும், அவர்கள் மூலம் பிள்ளைகளைப் பெறுவதும் திருமணத்துக்குத் தடையாகக் கருதப்படவில்லை[28]. இளமை தொட்டுப் பெண்கள் கற்பாக இருக்கப் பழகும் பொருட்டே இளமையில் அவர்களுக்குத் திருமண நிச்சயம் செய்யப்படுவதாயிற்று. இவ்வழக்கினாலேயே பெண்கள் ஒரு ஆடவனை

---

28. In some districts of Holland girls it is said are seldom virgins at their marriage and are often in an advanced state of pregnancy at the ceremony. Prenuptual unchastity, multiplity of lovers and illegitimate children are not looked upon as a bar to marriage. Similar views are said to remain in the rural parts of Austria, Baveria, Switzerland, Norway. In many parts of Italy says a sixteenth century writer the men would not think of marrying a woman who had not given proof of her popularity by the multitude of her armours - The mothers Vol. 3 - p. 313.

ஹல்லாந்தின் சில பகுதிகளில் திருமணமாகும் காலத்தில் கன்னியராக விருக்கும் பெண்கள் அரியர். பெண் கருக்கொண்டிருத்தல் பலகணவரையுடையவளா யிருத்தல்போல்வன அவள் திருமணத்துக்கு இடையூறுகளாக மாட்டா. ஆஸ்திரியா, பவேரியா சுவிற்சலாந்து நார்வே முதலி நாடுகளிலும் இக்கருத்தே நிலவி வருகின்றது. பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்த எழுத்தாளர் ஒருவர் இத்தாலியின் பல பகுதிகளில் பெண் ஒருத்தி தனக்குப் பல காதலர்கள் உளர் என்பதை அத்தாட்சிப் படுத்தினாலன்றி அவளை ஆடவன் மணந்துகொள்ள நினைக்கமாட்டான்" என்று கூறியுள்ளார்.

மாத்திரம் சேர்வதும் அவன் மூலம் பிள்ளைகளைப் பெறுதலுமாகிய கற்பு முறையைப் பழகினார்கள். கற்பு என்பதற்குப் பதிவிரதம் என்பது இன்னொரு பெயர். கற்பு அல்லது பதிவிரதம் உடையவள் பதிவிரதை எனப்பட்டாள். பதிவிரதம் என்பதிற்கு ஒரே பதியை அடையும் விரதம் அல்லது உறுதிப்பாடு என்பது பொருள்.

## குழந்தை மணம் புதியதா ?

இந்திய நாட்டிலே சில மக்கட் கூட்டங்களுக்கிடையில் சிறுவர் சிறுமியருக்கு மணஞ்செய்யும் வழக்கம் இருந்துவருகின்றது. இது மிகக் கொடிய வழக்கம் எனக் கருதப்பட்டு அதற்கு எதிராக சாரதா சட்டம் என ஒன்றும் செய்யப்பட்டுள்ளது. சின்னஞ் சிறு வயதில் மணஞ் செய்யப்பட்ட இருவருள் கணவன் இளமையிலேயே இறந்து விட்டால் பெண் தனது வாழ்க்கைக்காலம் முழுவதும் திருமணம் முடியாது கூந்தல் களைந்து எளிய வாழ்க்கை நடத்துதல் வேண்டுமென்னும் சமூகக் கட்டுப்பாட்டினாலும், மிக இளமையிலேயே பெண்கள் குழந்தைகளைப் பெறத் தொடங்கி விரைவில் இளைத்துப் போவதோடு பிள்ளைகளும் பெலமற்றவர்களாகின்றார்கள் என்னும் கருத்தினாலும் சாரதா சட்டம் உண்டாவதாயிற்று. பெண்கள் கற்பாக இருக்கப் பழகுவதற்காகவே இவ்வழக்கம் ஆதியில் உண்டாயிற்று. பெண்கள் கற்பாக இருக்கப் பழகிய இக்காலத்தில் சிறு பிள்ளைத் திருமணங்கள் வேண்டியதில்லை என்பது உண்மையே[29].

---

29. But also among races having a fully developed married institution the unmarried are often permitted to have in conditions of sexual froedom......The institution of child betrothal marred an important step in development; for in

## திருமண வரலாற்றுச் சுருக்கம்

மக்களின் முற்பருவத்தில் ஆடவர் ஒரு தனிக் கூட்டமாகவும், பெண்கள் மற்றொரு தனிக் கூட்டமாகவும் வாழ்ந்தார்கள். அப்பொழுது ஆடவர் கூட்டத்தினர் பெண் கூட்டத்தினரின் கணவராகக் கருதப்பட்டனர். ஒரு கூட்டத்திலுள்ள பெண்களெல்லோருக்கும் மற்றக் கூட்டத்திலுள்ள ஆடவரெல்லாம் கணவர் என்பதும், ஆடவர்கள் கூட்டத்திலுள்ள ஆடவர் எல்லோருக்கும் பெண்கள் கூட்டத்திலுள்ள பெண்கள் எல்லோரும் மனைவியர் என்பதும் கொள்கையளவிலோ நடைமுறையிலோ இருந்து வந்தது. அக்காலத்திலேயே ஒரு கூட்டத்துள் அல்லது கோத்திரத்துள் ஆண் பெண்கள் திருமணஞ் செய்துகொள்ளலாகாது என்னும் வழக்கு உண்டாயிற்று. இன்றும் தென்னிந்திய மக்கட் பிரிவினர் பலரிடையிலும், உலகின் பல பாகங்களிலும் இவ் வழக்கு இருந்துவருகிறன்து. தென்னிந்திய மக்கள் கோத்திரம் எனக் கொண்டது தாய்வட்டத்தையேயாகும். கோத்திரமென்பது குலக் குறி "Totem" என மற்றைய மக்களிடையே வழங்கும். இன்று நீலகிரி மலையிலுள்ள

---

such cases the bride was from childhood destined for her husband and bound to chastity. This is the historical significance of child betrothal-The World History Vol. 1-p.50.

திருமண ஒழுங்குகள் உருப்பட்டுள்ள நாடுகளிலும் மணமாகாத பெண்களுக்கு அவர்கள் விரும்பிய ஆடவருக்குத் தமது தயவை அளிக்கும் சுதந்தரம் இருந்துவந்தது. சிறு பிள்ளைகளாக இருக்கும்போது அவர்களுக்குத் திருமணம் நிச்சயம் செய்யப்படுவதால் அவர்கள் இளமை தொடக்கம் தம் கணவருக்கே உரிமைப்பட்டுக் கற்பாயிருக்கப் பழகினர்கள். சிறு பிள்ளைத் திருமணத்தின் இரகசியம் இதுவே.

தோடர் வகுப்பில் ஆடவர் சிலர் பெண்கள் சிலரைத் தமக்குப் பொதுவில் மனைவியராக வைத்திருக்கும் வழக்கு உண்டு என்று தேஸ்ரன் என்பார் கூறியுள்ளார்.

இவ்வகைக் கூட்டத் திருமணம் (Group marriage) 'சிலகாலம் நடைபெற்றபின் பெண்கள் தாம் விரும்பிய ஒரு ஆடவனையோ, பல ஆடவரையோ தெரிந்தெடுத்தார்கள்; தாம் விரும்பாதபோது அவர்களின் தொடர்பை நீக்கிவிட்டனர். சில காலத்தின்பின் அவர்கள் பல ஆடவரை ஓரிடத்தில் கூட்டி அவர்களுள் தாம் விரும்பிய ஒருவனைத் தெரிந்துகொண்டனர். இவ்வழக்கே சுயம்வரம் எனப்பட்டது.

ஆடவர் கூட்டத்திலுள்ள ஒரு ஆடவன் பெண்கள் கூட்டத்தினின்றும் ஒரு பெண்ணைத் தனக்கு மனைவியாக்கிக் கொண்டு வாழ விரும்பினன். அப்பொழுது அவன், பெண்கள் கூட்டத்தினின்று பெண்ணைத் திருடித் தனது கூட்டத்துக்குக் கொண்டு செல்வானுயினன். இதனைப் பெண்கள் கூட்டத்தினர் விரும்பமாட்டார்கள். இதனுல் அவர்கள் தமது கூட்டத்தினின்றும் ஒருத்தியை இழந்துவிடுகின்றனர். பின்பு ஒரு பெண்ணைப் பெற விரும்பியவன், அக் கூட்டத்துக்கு நேரும் நட்டத்தை நிறைவு செய்யும் பொருட்டு அக் கூட்டத்தாருக்கு ஆடு, மாடு முதலியவை

---

30. Group Marriage is the form established by the association of two hordes or packs according to which the men of one group marry the women of the other; not a marriage of individual men with individual women, but a promiscuous relationship, each man of one group marry all the women of the other group - at least in theory - The World History Vol. 1 - p. 48.

களைக் கொடுத்தான். இதில் இருந்து பெண்களை ஆடு மாடு களைக் கொடுத்துப் பெறும் வழக்கு உண்டாயிற்று. இதன் பின் மணமகன் மணமகள் இல்லத்திற் சென்று பெண்ணின் சுற்றத்தாரின் இசைவைப்பெற்று அவளை மணக்து தனது இடத்துக்குக் கொண்டுசென்று வாழ்தலாகிய வழக்கு உண் டாயிற்று.

## நாணம்

நாணம் பெண்களுக்குச் சிறந்த குணம். அது அவர்களுக்கு இயல்பாகஉள்ளது என்று கருதப்படுகின்றது. இதன் காரணத்தை ஆராயின் நாணம் என்பது இடைக்காலத்திற் றோன்றியதேயாகும். பெண்கள் தாம் விரும்பிய ஆடவரைத் தெரிந்து எடுத்துக்கொள்ளும்காலத்தில் ஆண்களைக் கண்டு நாணுதலாகிய குணம் அவர்களுக்கு உண்டாயிருந்தது என்று கூறுதல் அமையாது.

ஒரு பெண் பல கணவரை மணந்திருந்த காலத்தில் ஆண் பெண் சேர்க்கை தொடர்பான பொறாமை உண்டாத லும், ஒரு ஆண் பல மனைவியரை மணந்திருக்கும்போது அவ்வகைப் பொறாமை தோன்றியிருத்தலும் இயல்பன்றோ. இப்பொறாமையினாலேயே ஒருவன் ஒருத்தியையே மணத் தலும், ஒருத்தி ஒருவனையே மணத்தலுமாகிய மணமுறை உண்டாயிற்று. அக்காலத்தில் ஒருவனுக்குரிய மனைவியை பிறனொருவன் விரும்பிக் கவராமல் இருத்தற்கும், ஒருத்திக் குரிய கணவனைப் பிறள் ஒருத்தி கவர்ந்து கொள்ளாமல் இருக்கும்படியும், அவ்வகை விருப்புப் பிறருக்கு எழாதிருக் கும்படியும் சில சமூகக் கட்டுப்பாடுகள் தோன்றி வளர்ச்சி யடைந்தன.

ஒரு சிங்கம் அல்லது புலி ஒரு விலங்கைக் கொல்கின்றது. அது அதன் இரையை மறைவான ஓரிடத்திற்கு இழுத்துச்சென்று அவ்விடத்திலேயே அதனை உண்கின்றது. அது மறைவான இடத்துக்கு அதனை இழுத்துச் செல்வது மாமிசத்தை உணவாகக் கொள்ளும் பிற விலங்குகள் அவ்விரையைக் காணின் அவையும் அவ்விரையை உண்ண விரும்பும்; அதனால் அவை அவ்விரையைக் கவர்வதற்கு முயற்சிசெய்யும்; அதனால் சிங்கம் அல்லது புலியின் அமைதிக்குத் தடையுண்டாகும் என்று தெரிகின்றது. இவ்வகைக் கருத்தினைக்கொண்டே மக்களும் ஆண் பெண் சேர்க்கைகளைப் பிறர் காணுதபடி மறைவில் வைத்துக்கொள்வாராயினர். இது, காலத்தில் நாணத்தக்கதாகக் கொள்ளப்படலாயிற்று. பெண்கள் ஆடவருடன் சமமாகப் பழகுவதாலும் அவர்களுடன் நன்கு அளவளாவுதலாலும் ஆண் பெண் சேர்க்கை உணர்ச்சிகள் தோன்றுதல் இயல்பு. இது பற்றியே பெண்கள் ஆண்களைக் காணின் நாணி ஒதுங்கி நிற்றல் வேண்டும். என்னும் கட்டுப்பாடு உண்டாயிற்று. இக் கட்டுப்பாட்டின் வளர்ச்சியே நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு எனச் சொல்லப்படும் குணங்களாகும்.

## உடை நாணத்துக்காக அணியப்பட்டதா ?

உடை நாணத்துக்காக அணியப்பட்டது என இன்று நாம் கருதுகின்றோம். உடை நாணம்பற்றித் தோன்றவில்லை. வெப்ப நாடுகளில் உடை அவசியம் தேவைப்படவில்லை. குளிர் நாடுகளில் மக்கள் தோல் கம்பளி முதலியவைகளால் தமது உடலைப் போர்த்துக்கொண்டார்கள். இதிலிருந்து மக்கள் தமது உடம்பை அலங்கரிக்கும் வழக்கம் உண்டாயிற்று; அவர்கள் அலங்காரத்தின்பொருட்டு உடம்

பின் சில பகுதிகள் தெரியும்படியும் சில பகுதி மறையும் படியும் உடை யணிவாராயினர். இதிலிருந்தே உடை அணியும் வழக்கு வளர்ச்சியடைந்தது. முகமூடிகளை அணி தல் உடம்பை நிறமைகள் பூசி அலங்கரித்தல் முதலியன மந்திர வித்தைக்காரின் வழக்கங்களாகவிருந்தன. இவ் வழக்கினின்றும் உடை அணியும் பழக்கம் உண்டாயிற்று. பழைய மக்கள் கண்ணூற்றினால் நோய்களும் தீமைகளும் உண்டாவதை நம்பினார்கள். கருக்கொண்ட பெண்களும், பிள்ளையைப்பெற்ற பெண்களும் தங்கள் தனங்களைப் பிறர் பார்ப்பின் கண்ணூறு உண்டாகும்; அதனால் பால் வற்றிப் போகும், அல்லது தனங்கள்மீது கட்டி, முதலிய நோய்கள் உண்டாகும் என நம்பினார்கள். ஆகவே அவர்கள் தமது மார்பை மறைக்கலானார்கள்.

பாலித்தீவு, மலையாளம் முதலிய நாகரிகமடைந்த நாடுகளில் மார்பை மறையாதுவிடுதல் நாணத்தக்கதென்றாவது, நாகரிகக் குறைவானதென்றாவது கருதப்படுவதில்லை. இதனால் நாணம் என்பதும் ஒருவகைப் பழக்கம் என நன்கு விளங்குகின்றது.

ஆடவர், தமது ஆண் உறுப்பினைப் பிறர் நோக்கின் கண்ணூறு உண்டாகி நோயுண்டாகும், மலடு உண்டாகும் எனக் கருதிப் பிறர் காணா வகை அதனை மறைப்பாராயினர். பெண்களும் இதே நோக்கத்துடன் தமது உறுப்புக்களை மறைக்கலாயினர். இவ் வழக்கங்கள் நீண்டகாலம் தலைமுறை தலைமுறையாக வந்தன. அதனால் அவ் வுறுப்புக்களைப் பிறர் காணுதல் நாணத்தக்கது என்னும் கருத்து மக்கள் உள்ளத்தில் பதிந்து நாணமாக மாறிற்று.

சீனர் தமது பெண்களின் பாதங்களைச் சிறு வயதிலிருந்து இருப்புச் சப்பாத் திட்டு வளராதிருக்கச் செய்வர். அவர்கள் தமது பாதங்களைப் பிற ரெவரும் காணும்படி விடமாட்டார்கள். அவைகளைப் பிறர் காணும்படி விடுதல் ஆடவரும் மகளிரும் தமது இரகசிய உறுப்புக்களைப் பிறர் காணும்படி விடுதலினும் பார்க்க நாணத்தக்கதென அவர்கள் கருதுகின்றனர். இது நாணம் எவ்வாறு உண்டாகின்றதென நாம் நன்கு அறிந்துகொள்வதற்கு எடுத்துக் காட்டாகும்.[31]

---

31. Modesty is a derived feeling; it cannot exist until a high state of individualism has been attained, until each man desires exclusial possession of his wife, and therefore wishes to shield her from covetousness of other men. This leads to the performance of sexual intercourse private; and gradually to the concealment of the organs of sex - The Wold History Vol. 1 - p. 27-

Few Englishmen see anything indecent in the nude in art but would be horrified as the idea of the sexes bathing together when nude. In Japan nothing unmodest is found in the fact that the sexes bathe together in a state of absolute nudity; but any representation of nude in art is considered indecent. - From nudity to Raiment - p. 5 - Hilaine Hiber.

The wearing of clothes is in no way natural to man, and that the eariiest form of ornament was in the form of charms such as the cowrie shells worn in the soudon and elsewhere to by women to give them fertility - Ibid - p. 9.

Greek Girls used also to appear naked on certain days of festively and wrestle in public assembly promiacuously with boys of equal age with themselves - The Hindu Code P. XVIII - Dr. H. S. GOUR. D. C. LLD.

கிரேக்கநாட்டில் பருவமடைந்த பெண்களும் வாலிப ரும் நிர்வாணமாக நின்று பலர் முன்னிலையில் மல்யுத்தம் செய்தனர். நிர்வாணம் வெட்கத்துக்குரியதாக அவர்க ளால் கருதப்படவில்லை. கிரேக்க உரோமன் சிற்பங்களை யும் தென்னிந்திய ஆலயங்களில் காணப்படும் சிற்பங்களையும் நோக்குமிடத்துப் பெண்கள் அரைக்குமேல் உடையின்றி யிருத்தலோ, முழுமையும் உடையின்றியிருத்தலோ வெட் கத்துக்குரியதாகக் கருதப்படவில்லை என்று நன்கு விளங் கும்.

## விதவைகளை உடன்கட்டை ஏற்றுதல்

விதவைகளை உடன்கட்டை ஏற்றும் வழக்கு தந்தை ஆட்சிக் காலத்திலேயே உண்டாயிற்று. தம்முடன் இறக் கும் மனைவி, வேலைக்காரர் குதிரை போன்றவை தம்முடன் மறு உலகுக்குக்குச் செல்லுகின்றன என நம்பப்பட்டுவந்தது. ஆகவே பிரதானி ஒருவன் இறந்தபோது அவன் மனைவியர் வேலையாளர் முதலியோரும் உடன் வைத்துக் கொளுத்தப் பட்டார்கள் அல்லது புதைக்கப்பட்டார்கள்.[32] மனைவியரை

---

He (Lycurgus)ordered that they should go naked as well as young men, and dance too, in that condition at their solemn feasts and sacrifices, singing certain songs, whilst tho people stood in a ring about them, seeing and hearing them - The Kings and the whole senate as well as the vest of the of the City went to see and hear all that passed-Amatory Curiosa - p. 38.

32. Among Anglosaxons usually a widow was put to death on her deceased husbands pyre or at his grave side. If she did not offer herself her death she was scorned and hated - Sex and cultuee - p. 399 - J. D. Unwin,

உடன் கட்டை ஏற்றுவதற்குப் பிறிதோர் காரணமும் இருந்தது. கணவன் இறந்தபின் அவன் மனைவியர் பிற ஆடவரைக் கணவராகக்கொண்டு வாழ்வார் என்னும் பொருமை அவன் உள்ளத்தில் குடிகொண்டிருந்தது. அவனது எண்ணத்தை நிறைவேற்றும் பொருட்டும் பெண்கள் உடன் கட்டை ஏற்றப்பட்டார்கள்.

## விதவைகளை மொட்டை அடிக்கச் செய்தல்

மனைவியரைக் கணவனுடன் உடன்கட்டை ஏற்றுவதாகிய பொல்லாத வழக்கம் எல்லா நாடுகளிலும் நின்றுபோக அது இந்திய நாட்டில் சில மக்களிடையே மாத்திரம் சமீப காலம் வரையில் நடைபெறுவதாயிற்று. அது பிராமண மக்களிடையே சமய சம்பந்தமும் பெற்று கிரியைகளுடன் நடத்தப்பட்டு வருவதாயிற்று. இக்கொடிய வழக்கம் நடவாதபடி ஆங்கில ஆட்சியினர் சட்டம் வகுத்தனர். அவ்வாறு செய்தமை சமயத்துக்கு மாறு என வைதீகரிற் பலர் அரசினரை எதிர்த்துப் போராடினர். மனச் சாட்சிக்கு எதிரானதும் மிருகத்தன்மை உடையதுமாகிய இவ்வழக்கத்தை அரசினர் தம்மால் பரிபாலிககப்படும் மக்களிடையே நடக்க விடுவார்களா? அரசினரை எதிர்த்து நிற்கும் வலிமை பெருத அம் மக்கட் கூட்டத்தினர் கணவனை இழந்த மனைவியர் கூந்தலைக் களைந்து விதவை விரதம் காக்க வேண்டுமெனவும் அவர்கள் மறுமணம் செய்யவோ அல்லது பிறர் அவர்களைப் மணஞ் செய்து கொள்ளவோ கூடாதெனவும் சமூகக் கட்டுப்பாடுகள் செய்வாராயினர். ஒருவனுடன் மனைவியா யிருந்தவள் இன்னொருவனைச் சேர்ந்து சுகம் அடைதல் கூடாதென்னும் பொருமை உணர்ச்சியினுல் தந்தை ஆட்சியாளர் உண்டாக்கிய சுயநலச் சட்டங்களே இவைகளாகும். அவ்வழக்கத்தில்

தெய்வீகம் எதுவும் இருக்கவில்லை. இவ்வழக்கைப் பரிகசிப்பதற்குப் போலும் அராபிக் கதைகள் ஒன்றில் ஒரு தேசத்தில் மனைவி இறந்தால் கணவனை உடன்கட்டை ஏற்றவேண்டும் என்னும் சட்டம் இருந்ததெனக் கூறப்பட்டுள்ளது. பெண்களை உடன்கட்டை ஏற்றவும், மொட்டை அடித்துக் கொள்ளவும் சமூகச் சட்டஞ்செய்த ஆண்கள் தம் மனைவியர் இறந்தால் தாமும் தம் மனைவியருக்கு விசுவாசமுடையவர்களாய் இருப்பதற்கு அறிகுறியாகத் தாமும் உடன்கட்டை ஏறவேண்டும், தாமும் கைம்மை விரதம் காத்தல் வேண்டும் என்னும் சட்டங்கள் செய்யாதிருந்தமை தான் விநோதம். ஆடவரின் மனப்பான்மை என்னே! இரங்கத் தக்கது.

## இயற்கை விதி என்ன ?

ஆண் பெண் சேர்க்கை சந்ததிப் பெருக்கத்துக்காகவே உண்டாகின்றது என நாம் நம்மைச் சூழ்ந்துள்ள அசைவுள்ள அசைவில்லாத உயிர்த் தோற்றங்களை எல்லாம் நோக்கி நன்கு அறிந்துகொள்ளுதல் கூடும். சந்ததியைப் பெருக்கும் பொருட்டுத்தாம் முதலில் தெரிந்தெடுத்த ஆடவன் மூலமே மேலும் மேலும் தாம் சந்ததியைப் பெருக்குதல் வேண்டும் எனப் பெண்கள் உள்ளத்தில் உதயமாகும் ஒருவகை உணர்ச்சியினலேயே ஒருத்தி ஒருவனையே கணவனகக்கொள்ளும் உணர்ச்சியோ, வழக்கோ, கற்பு என்னும் ஒழுக்கமோ உண்டாயிற்று. இவ்வுணர்ச்சி உறுதிப்படாத அளவில் அவள், தான் விரும்பிய பிற ஆடவனைத் தெரிந்தெடுக்கும் எல்லா உரிமையும் உடையள். கணவனை இழந்தவர்களுக்கும் தாம் விரும்பும் பிற கணவரைத் தெரிந்தெடுக்கும் எல்லா உரிமைகளும் உண்டு. இவ்வகை இயற்கை

விதிகளுக்கு இடையூறாக, முட்டுக்கட்டையாக இருக்கும் சுயநலமுடைய ஆடவரின் கொடிய உணர்ச்சி இரங்கத்தக்க தொன்றே யாகும்.

## இந்து "லா"வில் பெண்களுக்கு உரிமைகள் மறுக்கப்பட்டதின் காரணம்

இந்து "லா" என்னும் சட்டத்தினுல் இந்திய மக்கள் ஆளப்படுகின்றனர். இது இந்திய மக்களின் ஒரு சாராருக் குரிய சட்ட திட்டங்களைக் கொண்டு செய்யப்பட்டதே யாகும். உண்மையில் அது இந்திய மக்கள் எல்லோருக்கும் உரிய சட்டங்கள் ஆகமாட்டா. கிழக்கு இந்தியக் கம்பனி யார் இந்தியாவில் ஆட்சி தொடங்கியபோது இந்திய மக்களி டம் வழங்கும் சட்ட நூல்களைக் கொண்டுவரும்படி மக்க ளுக்கு அறிவித்தனர். அவர்களிற் சிலர் அக்காலத்தில் ஆரி யப் பிராமணர்களால் தமது ஆக்கங் கருதி எழுதிவைத்த போதாயனம் அபஸ்தம்பம் முதலிய நீதி நூல்களையும் பிற ஸ்மிருதி நூல்களையும் கொடுத்தார்கள். மக்களின் ஆட்சிக் குரிய சட்டங்கள் அக்காலத்தில் எழுதி வைக்கப்படவில்லை என்றும், அவைகளை நியாயத்தார் (Judges) நன்கு அறிந்திருந் தார்கள் என்றும் மெகஸ்தீனஸ் என்பவரே குறிப்பிட்டுள் ளார். ஆகவே இந்திய மக்களின் உண்மையான சட்டங்கள் கிழக்கிந்தியக் கம்பனியாரின் கைக்கு எட்டவில்லை. ஆகவே அவர்கள் கிடைத்தவைகளைக் கொண்டு இந்துலா என்னும் சட்டங்களைச் செய்தார்கள். ஆரியர் தந்தை ஆட்சியினர். அவர்கள் பெண்களை கீழ்ப்படுத்தி யிருந்தனர், ஆதலினு லேயே 'இந்து லா"வில் பெண்களின் உரிமைகள் மறுக்கப்பட் டிருக்கின்றன. தென்னிந்திய சாதிக் குழுக்கள் (Castes and Tribes of Southern India) என்னும் நூலில் தேஸ்ரன்

எழுதியுள்ளவைகளை நோக்குவோமாயின் இந்தியர்களின் சட்டங்கள் வேறு "இந்துலா" வேறு என்று நன்கு விளங்கும். இந்துலா இந்தியர் "லா" வாக இல்லாமையினாலேயே அது திருத்தப்படல் வேண்டும் என்னும் கூச்சல்கள் கிளம்புகின்றன.

## தாலி தரித்தல்

திருமணக் காலத்தில் கணவன், மனைவிக்குத் தாலி கட்டும் வழக்கம் தென்னிந்திய நாட்டில் மாத்திரம் காணப்படுகின்றது. தாலி கட்டுதல் என்பது ஒரு மாட்டுக்குக் கயிறு கட்டுதல் போல் தாலியைக் கட்டிப் பெண்ணை ஆடவன் அடிமை கொள்ளுதல் எனச் சிலர் கூறி வருகின்றனர். தென்னிந்திய மக்கள் இன்று போலவே பழங் காலத்திலும் பூக்களை மாலையாகவும் விடு பூவாகவும் அணியும் விருப்புடையர். பெண், ஓர் ஆடவனைக் கணவனாகத் தெரிந்தெடுக்கும் காலங்களில் அவள் அவனுக்குப் பூ மாலையைச் சூட்டினாள். ஆடவனும், பெண்ணும் சமஉரிமையுடையவர்கள் என்னும் நிலைமையில் திருமணம் நிகழும்போது ஆடவன் பெண்ணுக்கு மாலை இட்டான்; பெண் ஆடவனுக்கு மாலையிட்டாள். முற்காலப் பெண்களும் சிறுவரும் புலிப் பற்கோத்த மாலைகளை அணிவது வழக்கம். ஆடவன் திருமணக் காலத்தில் பெண்ணுக்கு அவ்வகை மாலை ஒன்றைக் கொடுத்தான். இன்றும் தென்னிந்திய மக்கட் கூட்டத்தினர் பலருக்கிடையில் திருமணக் காலத்தில் பெண்ணுக்குத் தாலி கட்டுவோர் புரோகிதர், கணவனின் உடன் பிறந்தாள் முதலியோராவர். சில கூட்டத்தினரிடையே திருமணம் நிச்சயமானவுடன் கணவனின் உடன் பிறந்தாள் பெண் வீட்டுக்குச் சென்று அவள் கழுத்தில் தாலியைக் கட்டிவிடுகிறாள்.

இதனால் தாலி கட்டுவது பெண்ணை அடிமைப்படுத்துவதற்கு என்னும் கருத்து மிகப் பிழையாதல் காண்க. இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளின் முன் திருமணக் காலத்தில் தாலி தரிக்கும் வழக்கு இருந்ததாகத் தெரியவில்லை. கைம்மை அடைந்த பெண் தனது கை வளைகளை உடைத்தெறிந்து விடுவாள். இன்று தாலிதரித்திருத்தல் ஒரு பெண்ணின் கணவன் உயிரோடிருக்கிறான் என்பதை உணர்த்துகின்றது. இன்று கயிற்றில் அல்லது பொன் நாணிற் கோக்கப்பட்டிருக்கும் தாலி புலிப் பல்லின் வடிவுடையதா யிருக்கின்றது. சில கூட்டத்தினர் பொட்டுத் தாலியை அணிவர். தாலி தரிப்பதில் இழிவானதொன்றும் இல்லை என்பது வரலாற்று ஆராய்ச்சியினால் நன்கு விளங்குகிறது. மேல்நாட்டவர்கள் தாலிக்குப் பதில் மோதிரம் கொடுப்பர்.

## உயிர்களில் ஆணினங்கள் பெண்ணினங்களை விட அழகுடையன. ஏன்?

பறவைகளில் பெண் பறவைகளை விட ஆண் பறவைகளே அழகுடையன. கோழி, மயில் முதலிய பறவை இனங்களைப் பார்த்து இவ்வுண்மையை நாம் நன்கு அறிந்து கொள்ளலாகும். பெரும்பாலும் பறவைகள் ஆண்டின் சிற்சில காலங்களிலேயே முட்டை யிட்டுக் குஞ்சு பொரிக்கின்றன. பெண் பறவைகள் ஆண் பறவைகளுடன் சேர்ந்து கருக்கொள்ளும் காலத்தில் ஆண் பறவைகள் பெண் பறவைகளைக் கவரக்கூடியவாறு நிறத்தால் பிரகாச மடைகின்றன. விலங்குகளிலும் பெண்ணினங்களை விட ஆண் விலங்குகளே அழகுடையன. ஆண் சிங்கத்துக்குச் சடை யிருத்தல், சில பெண் விலங்குகளுக்குக் கொம்பில்லாதிருத்தல் ஆண் விலங்குகளுக்கு அழகிய கொம்பிருத்தல் போன்றவைகளாலும் பிற

வற்ருலானும் இதனை நாம் நன்கு அறிந்து கொள்ளலாம். புனுகு, சவ்வாதுப் பூனைகளின் ஆண்கள் ஆண் பெண் சேர்க்கைக் குரிய பருவ காலங்களில் நறு மணத்தை வெளிப்படுத்திப் பெண் இனங்களுக்குக் கவர்ச்சி உண்டாக்குகின்றன 33. மக்களுள்ளும் ஆடவரே அழகிற் சிறந்தவராவர். பெண்கள் வெளியிற் சென்று வேலை செய்யாதிருப்பதினுல் அவர்கள் சிறிது மினு மினுப்பு அடைகின்றனர். இன்னும் மேனி மினுக்குப் பொருள்கள், அணிகலன்கள் அழகிய ஆடைகளைப் பயன்படுத்திக் கொள்வதால் அவர்கள் ஆடவரினும் பார்க்க அழகாற் சிறந்தவர் போலக் காணப்படுகின்றனர். இரு பாலினரையும் ஆடையணி வகைகளின்றி நிறுத்திநோக்கின் இயற்கையில் ஆண்களே அழகுடையர் எனத் தோன்றும். இயற்கை, ஆணினங்களைப் பெண்ணினங்களினும் அழகாகப் படைத்திருப்பது பெண்ணினங்கள் ஆண்களின் அழகாற் கவரப்பட்டு அவைகளை இயற்கைத் தெரிவு செய்து கொள்ளற்கே யாகுமென்க. பெண்களின் பொருட்டு ஒன்ருேடு ஒன்று போரிடுவன ஆண்களே; பெண்கள் ஒருபோதும் ஆண்களின் பொருட்டுப் போரிடுவதில்லை.

## பொது மகளிர்

ஒரு காலத்தில் திருமணமாகாத பெண்கள் தமது தயவைத் தாம் விரும்பிய ஆடவர்களுக்கு அளிப்பவர்களாயிருந்

33. The male argus pheasant, noted for the extreme beauty of the plumage, shows himself off before the female by erecting his tail and expanding his magnificiant wing feathers......The bullfinch makes his advances in point of the female and then puffs out his breast so that many more of the crimson feathers are seen than would otherwise be the case. The males of certain babcon species are said to turn their coloured surface to the females - Darwin.

தனர். ஒருவன் ஒருத்தியை மணஞ் செய்துகொள்வதால் அவள், குடும்பத்தின் பொது உடைமை என்பதினின்றும் நீங்கி ஒருவனின் தனி உடைமையாளுள். இவ்வாறு மணமாகி ஒருவனுக்கு உரிமையாகாத பெண்கள் பொதுமகளிராகவே இருந்துவந்தனர். இன்றும் சில சமூகங்களுக்குள் திருமணமான பெண்கள் தமது தயவைத் தங் கணவரின் உறவினராகிய ஆடவருக்கு அளிக்கக் கடமைப் பட்டுள்ளார்கள். பிற் போக்குடைய தென்னிந்திய மக்கள் சிலரிடையே இன்றும் இவ்வழக்கத்தைக் காணலாகும்.[34]

மேற்குத் தேசங்களில் பொது மகளிராக வாழ்க்கை நடத்தும் பெண்களின் தொகை மிகப் பலவாகும். நீதிபதி லின்சி என்பார் கூறியிருப்பது வருமாறு: “ நியூ யோக் நகரில் தங்கள் கணவரல்லாத ஆடவருடன் வாழும் பெண்கள் ஐம்பதினுயிரத்துக்கு மேற்பட்டவராவர். இலண்டன் பட்டினத்தைப்பற்றி அறியுமிடத்து அங்கு இம்முறையில் வாழும்

---

34. It is further said that their newly married girls are even compelled to co-habit with their husband's near relatives. Married women are allowed to bestow their favours upon their husband's relations, and it is an understanding that a man should not enter his dwelling, if he sees another's slippers placed outside as a sign that the owner of them is with the mistress of the house—Castes and Tribes of Southern India Vol. 7 - p. 182.

Valians of Puttukkotai in Tanjore District say, intimacy between a man and woman before marriage is tolerated, and children of such union are regarded as members of the caste and permitted to intermarry with others provided that the parties pay a nominal penalty imposed by the council—*Ibid*.

பெண்களின் தொகையும் இவ்வெண்ணுக்கு நேராகக் கூடும் எனத் தெரிகின்றது. இவ்வாறு வாழும் பெண்கள் பெரும்பாலும் 18 வயதுக்கும் 35 வயதுக்கும் இடைப்பட்டவர்களாவர்."[35] பொது மகளிர் காலத்தில் விலைமாதர் ஆக மாறினர். 1926-ம் ஆண்டில் எழுதப்பட்ட ஒரு நூலில் பரிஸ் நகரில் மாத்திரம் காணப்படும் பதிவு செய்த விலைமாதரின் எண் எழுபதினாயிரம் என்றும், பதிவு செய்யாதவர்களின் எண்ணிக்கை இத் தொகையிலும் பன்மடங்கு ஆகும் எனவும் கூறப்பட்டுள்ளன.[36]

## தேவடியாள் வழக்கம்

முற்காலத்தில் சமயத்தின் பெயரால் தீய ஒழுக்கங்கள் பல நிலவின. அவைகளுள் தேவடியாள் வழக்கமும் ஒன்

---

35. According to Judge Lindsey there are at least fifty thousand girls in New York living with men who are not their husbands, and knowing both London and New York we are of the opinion that London can easily rival these figures. Free unions of a more or less durable nature which are really natural however will be considered later and what here concerns us is the increase in occasional semipromiscuous sexual intercourse between the ages of 18 and thirtyfive - which is effectively elominating the necessity of commercial prostitution - Marriage Past Present and future.

36. Today in the City of Paris there are seventy thousand registered prostitutes, and certainly several times that number unregistered and every other city and town in the country has its large share. The houses of prostitution in France are filled with youug, childless, exmarried women, while most of the semipublic prostitutes in the country are of the same class - Thurston's philosophy of marriage pp. 53, 54.

ருகும். இது அக்கால மக்களால் குற்றமாகக் கருதப்படவில்லை. ஒரு காலத்தில் பெண்களை உயிருடன் இறந்த கணவரோடு வைத்துக் கொளுத்துதலை மக்கள் சிலர் உயர்ந்த அறமாகக் கருதினார்களல்லவா? ஆபிரிக்காவின் சில பாகங்களில் வயது முதிர்ந்த பெற்றோரைப் பிள்ளைகள் கொன்று அவர்களின் இறைச்சியைக் கடைகளில் விற்றார்கள். இது அவர்கள் சமூகத்தில் குற்றமாகக் கருதப்படவில்லை. ஐரோப்பிய நாடுகளில் நோயினாற் பிழைக்கமாட்டாதவர்களை அவர் சுற்றத்தினர் ஆலயங்களுக்குக் கொண்டு சென்று தண்டாயுதத்தினால் அடித்துக் கொன்றனர். இவ்வகைத் தண்டாயுதங்கள் குடும்பத் தண்டாயுதங்கள் என்னும் பெயருடன் இன்றும் சுவிடின் தேசத்திலுள்ள கிறித்துவ ஆலயங்களில் உள்ளன. தேவடியாள் வழக்கம் உலகம் முழுமையிலும் ஒருகால் காணப்பட்டதாயினும் அது இன்றும் இந்திய நாட்டில் காணப்படுகின்றது. அவ்வழக்கம் நாள் வீதம் மறைந்துவருகின்றது.

தேவடியாள் வழக்கம் உண்டான வரலாறு ஈண்டு கூறப்படுகின்றது. முற்காலத்தில் ஆடவரும் மகளிரும் தனித் தனிக் கூட்டத்தினராக வாழ்ந்து வந்தார்கள். ஆண்டில் ஒரு முறையோ இரு முறையோ இரு பாலாரும் பொது இடங்களிற் சந்தித்துக்கொள்வதாகிய வழக்கம் இருந்து வந்தது. பின்பு பொது இடமாகிய ஆலயத்தில் நிகழும் ஆண் பெண் சேர்க்கை பரிசுத்தமுடையதாகக் கருதப்பட்டது. தந்தை ஆட்சி உண்டாகி வியபிசாரம் குற்றமாகக் கொள்ளப்பட்ட காலத்திலும் ஆலயங்களிற் செய்யப்படும் வியபிசாரம் குற்றமாகக் கருதப்படவில்லை. இது பபிலோனிய, அசிரிய பழஞ் சட்டங்களைக் கொண்டு நன்கு அறியப்படுகின்றது. அக்காலத்திலே மேற்கு ஆசிய நாடுகளில் பெண்கள் ஆலயங்களிற் சென்று ஆடவரைச் சேர்தலாகிய நேர்த்திக் கடன்கள்

செய்தல் சர்வ சாதாரணமாக இருந்து வந்தது.[37] மேற்கு ஆசிய நாடுகளில் இவ்வழக்கம் எவ்வாறு மிக மலிந்து காணப் பட்டன என்பதற்கு எடுத்துக் காட்டு கீழே காட்டப்பட் டுள்ளது.

---

37. In Cyprus it appears that before marriage all women were formerly obliged by custom to prostitute themselves to strangers at the sanctuary of the goddess, where she went by the name of Aphrodite, Astarte, or what not similar customs prevailed in many parts of Western Asia. Whatever the motive the practice was clearly regarded not as an orgy of lust, but as a solemn religious duty performed in the service of the great mother goddess of Western Asia, whose name varied, while her type remained constant from place to place. Thus at Babylon every women whether rich or poor, had once in her life time to submit to the embrace of a stranger at the tempie of Mylitta that is of Ishar or Astrate and to dedicate to the goddess the wages earned by the sanctified harlotry. The sacred precinct was crowded with women waiting to observe the custom. Some of them had to wait there for years at the Heliopolis or Baalbec in Syria famous for the imposing grandour of the ruined temples. The custom of the country, required that every maiden should prostitute herself to a stranger at the temple of Astarte. Matrons as well as maidens testified their devotion to the goddess in the same mannar. In Phonecian temples women prostitute themselves for live in the service of religion, believing that by this conduct they propitiated the goddess and won her favonr. It was a law of the Amorites that she who was about to marry should set in fornication seven days by the gate......At Bablus the people shaved their heads in the annual mourning for Adonis. The women who refused

முற்காலத்தில் தாய்க்கடவுளரின் கோயில்களில் பெண்கள் பூசாரிகளாக விருந்தனர். கன்னிப்பெண்கள் பலர் தேவடியாட்களாக வந்தடைந்தனர். ஆலயங்களில் நிகழும் ஆண் பெண் சேர்க்கை புனிதமுடையதென்று கருதப்பட்ட தாதலின் அப்பெண்கள் ஆலயங்களுக்கு வரும் ஆண் தேவ அடியாரைச்சேர்வாராயினர். தேவஅடியார் ஆகியபெண்கள் ஆண் கடவுளரின் ஆலயங்களுக்கு நேர்ந்துவிடப்பட்டபோது அவர்கள் கடவுளின் மனைவியர் எனப்பட்டனர். கடவுளின் கடமையைக் குருமார் நிறைவேற்றி வந்தனர். இவைபோன்ற பழக்க வழக்கங்களின் வளர்ச்சியே தேவதாசி வழக்கமாக நிலவுகின்றது.

---

to sacrifice their hair had to give themselves up to strangers on a certain day of the festival and the money which they earned was devoted to the goddess. This custom may have been migration of an older rule when at Babylus as elsewhere formerly compelled every women with exception to sacrifice of her virtue in the service of religion. We are told that in Lydia all girls were obliged to prostitute themselves in order to earn a dowry, but we may suspect that the real motive of the custom was devotion rather than economy. The suspician is confirmed by a Greek inscription found at Talles in Lydia, which proves that the practical religious prostitution survives in the country as late as second century of our era. It records of a certain woman Aurchia Aemilia by name, not only that she herself served the god in the capacity of a harlot at his express command, but that her mother and other female ancestors have done the same before her. In Armania the noblest females dedicated their daughters to the serviee of the goddess Anaites on her temple at Acilisena where the dancers acted as prostitutes for a long time

## கன்னி அழித்தலில் அச்சம்

முற்கால ஆடவர் பெண்களின் கன்னிமையை அழிப்பதில் பெரிதும் அச்சங்கொண்டிருந்தார்கள். ஆகவே கன்னிப் பெண்கள் ஆலயங்களுக்குச் சென்று தாம் விரும்பிய ஆடவரைக் கூடித் தமது கன்னிமையை அழித்துக்கொண்டார்கள். சில நாடுகளில் அரசரும் குருமாரும் இக்கடமையை

---

before they were given in marriage. Nobody scrupled to take one of these girls to wife when her period of service was over. Again the goddess Ma was served by a multitude of sacred harlots in Comanu, and crowds of men and women flocked to her sanctuary from the neighbouring cities and country to attend the biennial festivals or to pay their vows to the goddess - Golden Bough. Part IV. - P. 39.

Not was this Babylonian temple mentioned by Heradotus an isolated case. The Mylatta cult was practised in many parts of the conntry. In other iands notably Egypt and Greece, the women served their respective duties in much the same way. Starbo says that the Temple of Aphrodite Porne at Corinth contained no fewer than a thousand harlots at a time all of them served the goddess. Tarther affirms this same historian, among the anciant Greeks it was customary to dedicate to Zeus the most beautiful vergin girls available. They were forced to remain in the service of the deity giving their bodies to all men who sought them, until the outset of mensuration proclaimed the embrace marriage, In the temple of Aesculapus near Tithoraea, there was always in readiness a bed prepared for the purpose of incubation which was practised there, as in other santuries of that god-Phallic worship - p. 65.

நிறைவேற்றி வந்தார்கள்.38 மலையாளத்தில் இவ்வழக்கம் சமீபகாலம் வரையில் நிகழ்வதாயிற்று.39 வியபிசாரங்களுக் குச் சமயம் ஆதரவளித்தபடியாலேயே ஆலயங்களில் வியபி

---

38. In an old manuscript, which contains a collection of pieces in the Irish language compiled about A. D. 1100 it is said Conchobar, King of Ulster, who lived at the time when Christ was born, deflowered all the virgins of his kingdom and it is indicated that the defloweration of maidens was a duty incubent upon them - A short History of Marriage - p. 15 - Edward Westermark.

39. Numbudries were entitled to the first fruits; and it was considered the high privilege to every Nair maid to be introduced by them to woman hood. In this connection reference may be made to Hamill's new account of the East Indies where it is stated, "When Zomorin married he must not Cohabit with his bride till the Nambudiri or chief priest has enjoyed her. And he, if he pleases may have three nights of her nuptuals because the first fruits of her nuptuals must be an holy oblation to the god she worships, and some of the nobles are so complaisant as to allow the clergy the same tribute, but the common people cannot have the compliment paid to them, but are forced to supply the Priest's place for themselves - Castes and Tribes of Southern India - Thurston.

It has been proposed to derive the religious prostitution of Western Asia from a privilege secular and precutionary practise of destroying a bride's virginity before handing her over in order that the bridegroom's intercourse should be safe from a peril that is much dreaded by men in certain stage of culture - Golden Bough IV p. 50 - Frazer.

சாரம்புரியும் தேவடியாட்கள் நிறைந்திருந்தனர். தஞ்சாவூர்ப் பெரிய ஆலயத்தில் 400 தேவடியாட்கள் இருந்தார்கள் என்பதற்குக் கல்வெட்டு தொடர்பான சான்று உண்டு. மகமத் கசனி சோமநாத ஆலயத்தைத் தகர்த்தபோது அங்கு முந்நூறு தேவடியாட்கள் இருந்தனர்.

## தாய்மார் குழந்தைகளுக்குப் பாலூட்டி வளர்க்குங் காலம்

கருக்கொள்ளுங்காலத்தில் மாத்திரம் பெண் விலங்குகளும் ஆண் விலங்குகளும் சேர்கின்றன. கருக்கொண்டபின் பெண் விலங்குகள் ஆண் விலங்குகளைத் துரத்தி விடுகின்றன. குட்டி யீன்று அவைகள் பெரிதானபின் மறுபடியும் கருக்கொள்ளும் காலத்திலேயே அவை மறுபடியும் ஆண் விலங்குகளைச் சேருகின்றன. கருத் தரித்தபின் அவை ஆண் விலங்குகளைச் சேர்வதில்லை. இதே விதி மக்களிடையும் இருந்தது. இன்றும் பிற்போக்குடைய மக்களிடையே இவ்வொழுங்கு இருந்துவருகின்றது. சில கூட்டத்தின ரிடையே பெண்கள் ஆறு ஏழு ஆண்டுகள் வரையில் பிள்ளைகளுக்குப் பால்கொடுத்து வளர்ப்பார்கள். அவ்வளவுகாலமும் அவர்கள் ஆண் சேர்க்கையின்றி யிருப்பர். நாகரிகமே இப்பொழுது இவ்வியற்கை விதியைமாற்றிவிட்டதுபோலும்.[40]

---

40. A Fuegian husband is not even permitted to speak to his wife after her confinement unless she gives him leave to do so......In premitive socities it is a very general rule that all cohabitation must cease when a woman became pregnant. At any rate during the later month of pregnancy and the seperation between her and her husband is commonly observed during the whole time that she is nursing the child. The latter period is very much longer among uncultured peoples than with European women......To suckle her children for even four years; and even five six or seven

years is quite usual for a premitive woman. From two to three years is the most general duration of nursing. Though-out the general part of that time marital relation among many uncultured people cease entirely......The usage was general among the tribes of America and the restriction extended from the first recognision of pregnancy to the end of the period of suckling - In Figi it is quite out of the question for a man to have relations with his wife at any time she is pregnant or is suckling a child that is for about four years. In New Caledonia abstention from marital relations is also observed during the whole duration of both pregnancy and nursing that is for four or five years. In Solomon Islands after the birth of the child the husband is not supposed to cohabit wifh his wife until child could walk, so again in Loyality islands a man may not even see his wife until the child is able to crowl - The Mothers Vol. 2 - p. 391.

பியூசித்தீத்தீவிலே மனைவி கருக்கொண்டிருக்குங்காலத்தில் கணவன் அவளுடன் பேசத்தானும் அனுமதிக்கப்படமாட்டான். முற்காலச் சமூகங்களில் பெண் கருக்கொண்டதும் ஆண் பெண் சேர்க்கை அறவே ஒழிக்கப்படவேண்டும் என்னும் கட்டாயம் இருந்துவந்தது. கரு வளர்ச்சியுற்ற பிற்காலத்திலும் மனைவி பிள்ளையைப் பெற்றுப் பால் கொடுக்கும் காலத்திலும் கணவனும் மனைவியும் பிரிந்திருந்தார்கள். திருந்தாத மக்களிடையே பிள்ளைகளுக்குப் பாலூட்டி வளர்க்குங் காலம் மிகவும்நீண்டது. வடஅமெரிக்கரிடையே பெண் கருக்கொண்டு பிள்ளையைப் பெற்றுப் பாலூட்டி வளர்க்குங்காலம் முழுமையும் கணவனோடு சேர்ந்து வாழும் தொடர்பு முற்றாக நீக்கப்பட்டுள்ளது. இதனால் நாலு ஆண்டுகள் வரையில் கணவன் மனைவியுடன் தொடர்பு வைத்திருத்தல் முடியாததாகும். நீயுகலிடோனியா என்னும் இடத்திலும் மனைவி கருக்கொண்டதிலிருந்து இருவரும் கணவன் மனைவிஎன்னும் தொடர்பின்றி நாலு அல்லது ஐந்து ஆண்டுகள் வாழ்தலாகிய வழக்கம் உண்டு. சலமன் தீவுகளில் பிள்ளை நடக்கும்பருவம் அடைவதன்முன் கணவன் மனைவியுடன் சேர அனுமதிக்கப்படமாட்டான். லோயாலிற்றித் தீவுகளில் பிள்ளை தவழும் பருவம் அடையுமுன் கணவன் மனைவியைப் பார்க்கத்தானும் முடியாது.

தாழ்ந்த மக்களிடையே காணப்படும் ஆண் பெண் சேர்க்கை விதிகளே மிக ஏற்புடையன எனக் கூறுகின்றனர்.41

## ஆண் பெண் சேர்க்கையின் நோக்கம்

ஆண் பெண் சேர்க்கை சந்ததிகளைப்பெருக்கும் நோக்கம் ஒன்றற்காகவே உள்ளது. இவ்வியற்கை விதியை மீறி நடப்பவர்கள் உறுதியாகத் தண்டனைக்குத் தப்பமாட்டார்கள். ஆண் பெண் சேர்க்கையினால் ஆண்களே பெரிதும் தம் வலியை இழந்துவிடுகின்றனர். மனிதன் தான் பயன்படுத்தும் மாடு குதிரைகளின் ஆணினங்களைப் பெண் விலங்குகளோடு சேராமல் இருக்கும்படி தனியே வைத்து வளர்க்கின்றான்; இன்றேல் அவைகளின் விதையை அடித்துவிடுகிறான். ஆண் பெண் சேர்க்கையினால் ஆண்கள் தமது வலிவை இழந்துவிடுகின்றன என்னும் கருத்துப்பற்றியே அவன் அவ்வாறுசெய்து வருகின்றான்.

முனிவர் ஒருவர் நீண்ட காலம் தவம் செய்துகொண்டிருந்தார். ஒரு நாள் அவர் பெண் ஒருத்தியைக்கண்டு அவள்மீது ஆசைகொண்டு அவளைச் சேர்ந்தார். அதனால் அவர் தனது தவ வலியை இழந்துவிட்டார் என்பனபோன்ற பழங்கதைகள் புராணங்களிற் காணப்படுகின்றன. இக் கதைகள் பெண்களின் சேர்க்கையால் ஆடவர் தமது உடல் வலி மனவலிகளை இழந்துவிடுகின்றார்கள் என்பதை உணர்த்துவதற்கு எழுந்தவைகளே யாகும். பெண்களின் சேர்க்கையில் அதிகம் அழுந்தும் ஆடவன் ஐம்பது ஆண்டுகளுள்ளேயே

---

41. If a verile bull breaks into a pen with a pregnant cow, the latter will make every effort within her power to avoid him. If she be unable to do so, the stock raiser always expects to be presented later on with a defective calf...Sexual intercourse during pregnancy is responsible for an almost endless list of physical and mental defects in children.....and the number of physical and mental defectives, due to this cause, is rapidly increasing from year to year—Thurston's phylosaphy of marriage - p. 13.

இழைத்து ஓய்ந்துவிடுகின்றான். அமெரிக்காவில் மனைவியை இழந்தவர்களிலும் பார்க்கக் கணவனை இழந்த பெண்களின் எண் 2,000,000 அதிகம் என்று கணக்கு இடப்பட்டது. (1926)[42] இது ஆடவர் அளவுக்கு அதிகம் பெண்போகத்தில் அழுந்தியதன் பெறு பேறு எனப்படுகின்றது.

## பெண்கள் உயர்நிலை அடைவதற்கு வழி

பெண்கள் தற்போது தமது வாழ்க்கைக்கு ஆடவரையே எதிர் பார்க்கவேண்டிய நிலையில் இருக்கின்றனர். தாமே பொருளீட்டித் தம் வாழ்க்கையையும் குடும்ப வாழ்க்கையையும் நடத்தும் நிலையிலுள்ள பெண்கள் ஆடவரை ஒப்பவோ, ஆடவரிலும் மேலாகவோ அதிகாரமுடையவர்களாக வாழ்ந்து வருதலை நாம் காண்கின்றோம். ஆண்களும் பெண்களும் வேலைசெய்து பொருளீட்டும் வேலைக்கார வகுப்பினர்களிடையே பெண்கள் ஆண்களை ஒப்ப அதிகாரம் உடையவர்களாக இருக்கின்றனர். சில சமயங்களில் ஆடவன் உழைப்பற்றவனாகிவிட மனைவியே ஆசிரியையாகவோ, எழுத்தாளியாகவோ வேலை புரிந்து குடும்பத்தைக் காப்பாற்றுகின்றாள். இவ்வகைக் குடும்பங்களில் கணவனைவிட மனைவியே குடும்பத்தில் அதிகாரம் உடையவள். இவைபோன்ற நிகழ்ச்சிகளால் குடும்பத்தில் மனைவிக்கோ கணவனுக்கோ அதிகாரம் உண்டாவது பொருளாதார நிலையினால் என்று நன்கு விளங்குகின்றது. சில இடங்களில் பெண்களின் பெற்றோர் பெண்ணின் கணவனை விலை கொடுத்து (சீதனம் கொடுத்து) வாங்குகின்றனர். பெண்ணின் பெற்றோர் எவ்வளவு அதிகம் விலை கொடுக்கிறார்களோ அவ்வளவுக்குக் கணவன் பெண்ணின் அடிமையாக வாழ்ந்துவருகின்றான். இவ்வகை நிகழ்ச்சிகளைப் பெரிதும் இலங்கையின் வட பகுதியில் வாழும் தமிழ்க்குடும்பங்களிடையே நாம் இன்றும் காணலாகும்.

பெண்கள் உயர் நிலை எய்தவேண்டுமாயின் அவர்கள் தமது வாழ்க்கையைப் பிறர் எவரின் கையையும் எதிர்பாராது

42. At present there are approximately, 2,000,000 more widows in the United States than there are widowers - Ibid.

நடத்தக்கூடிய நிலையை எய்துதல்வேண்டும். ஆகவே அவர்கள் தாய் பருவம் அடையும் காலத்தில் தம் வாழ்க்கைச் செலவுக்கு வேண்டும் பொருள் தொகுக்கக்கூடிய கல்வியை இளவயதிலிருந்து பயிலுதல் வேண்டும்.

## இன்று உண்மையில் நிகழ்வது என்ன?

இன்று ஆடவனே பெண்ணுக்கு அதிகாரி என்பது கொள்கையளவில் இருந்து வருகின்றது. ஆனால் நிகழ்ச்சி இதற்கு நேர் மாறாகவே இருந்துவருகின்றது. அந்தரங்கத்தில் கணவன் மனைவிக்கு முன் நடுநடுங்குகின்றான். இவ்வகைக் காட்சிகளே, நாடகங்களிலும், பேசும் படங்களிலும் காட்டப்படுகின்றன. திருமணமான ஒவ்வொருவனுக்கும் கணவனோ மனைவியோ மேலான வல்லமை என்று இதயத்தில் நன்கு தெரியும். ஆயினும் அவன் தனது கருத்தை எளிதில் வெளியிடுவதில்லை.

## உண்மையான அன்பு இருக்குமானல்

பெண் ஒருத்தி தன் கணவனிடத்தில் உண்மையான அன்பு வைத்திருந்தால் அவன் தான் விரும்பிய இன்னொருத்தியை அடைதலைக்குறித்து வருந்தமாட்டாளென்றும், அவ்வாறே கணவனும் அவள் தான் விரும்பிய இன்னொருவனை அடைதலைக்குறித்து கவலை கொள்ளமாட்டானென்றும் மேல் நாட்டறிஞர் ஒருவர் கூறியுள்ளார்.[43]

## ஹனி மூன்

திருமணத்துக்குப் பின் கணவனும் மனைவியும் உல்லாசப் பயணஞ்செய்து சில நாட்கள் தனித்து வாழ்தலை ஹனி மூன்

43. A man who truly loves a woman will unhesitantly will surrender her to another if his sacrifice will be contentive to her greater happiness, and as women who truly loves her husband will make a like sacrifice but although this sentiment is somewhat rare at present it is unquestional and gaining strength—Marriage past present an Future - p. 164.

என்று மேல்நாட்டவர்கள் வழங்குகின்றனர். இது யாதோ சிறந்த ஒழுக்கம் எனக் கருதிக் கீழ்நாட்டவர்களிற் பலரும் அதனைப் பின்பற்றி வருகின்றனர். முற்காலத்தில் ஆடவன் ஒருவன் ஒரு தாய்வட்டத்திலிருந்து ஒரு பெண்ணைத் திருடிக்கொண்டு, அத் தாய்வட்டத்திலுள்ளவர்களின் சினம் தணியும் வரையில் மறைவில் வாழ்வதாகிய இவ்வழக்கமே "ஹனிமூன்" எனப்படுகின்றது. நம்மவர் மேல்நாட்டவரைப் பார்த்துக் காற் சட்டை, டை, காலர் முதலியவைகளை அணிவது போன்றது இவ்வழக்கம். "கண்ட பாவனையிற் கொண்டை முடிதல்".

## பெண் எப்பொழுதும் பிற ஆடவரை நினைந்து ஆசைப்படுகிறாளா ?

மக்களுக்கு மண், பெண், பொன் என முப்பெரும் ஆசைகள் உண்டு எனத் தத்துவ சாத்திரிகள் கூறியிருக்கின்றனர். விலங்குகளிலும், பறவைகளிலும், சிற்றுயிர்களிலும் ஆண்களே பெண்களை நாடிச் செல்கின்றன; மக்களிடையும் இவ்விதியே அமைந்துள்ளது. இயற்கை விதி இவ்வாறாகவும் புராணக் கதைகளிலும், பாரதம், இராமாயணங்களிலும் பெண்கள் உறுதியான மனமுடையவர்கள் அல்லர் என்றும் அவர்கள் கருத்து எப்பொழுதும் பிற ஆடவர் மீது ஓடிக் கொண்டு இருக்கும் என்றும், இயற்கைக்கு மாறாக எழுதி வைக்கப்பட்டுள்ளன. ஆடவர் பெண்களை அடிமைப்படுத்திய காலத்தில் தாம் எழுதும் நூல்களில் தாம் விரும்பிய வாறெல்லாம் பெண்களைப்பற்றி எழுதிவிடலாமல்லவா ? "அருக்கு மங்கையர் மலரடி பரவியும்" என வரும் அருணகிரி நாதர் பாடல், விலைமாதராயினும் அவர்கள் ஆடவர் எண்ணத்துக்கு எளிதில் இடங்கொடார் என்பதை விளக்குகின்றது. (அருக்கு - அருக்குகின்ற). எண்ணறக்கற்று எழுத்தற வாசித்தாலும் பெண் புத்தி என்பதெல்லாம் பெரும் பேதைமைத்தே" என்பதுபோன்ற வாக்கியங்கள் இலக்கியங்களிலிருந்து எடுக்கப்படவேண்டும்.

---